"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 14.] 1905-ம்௵ நவம்பர்மீ. [சஞ்சிகை 7.

SRI VIDYA OR THE HOLY SCIENCE OF

# "CHARACTER-BUILDING."

## IV. "The Faith that Faltereth not nor Faileth."

"OM! THOUGH THOU SLAYEST SRI, YET WILL I TRUST IN THEE" represents the full measure of that FAITH that receives to the fullest "the ever full never full bounty of Love" that flows unceasingly to wherever there is room to fill.—*Gleanings on the Way.*

"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."—*Muriel Strode.*

"The prince of darkness," it is said, has dominion over us and controls us by means of his lieutenants, thoughts of anger, of hate, of love of money, of generation. "As man is capable of creating thought-forms and endowing them with a certain amount of life and perpetuity, and these thought-forms are many times of the most malignant character, these get into the world and become 'elementals'." How can man be led through this time of great trial and deception and organised evil? Here is a hint of the way out of this evil, which we give in the words of a writer in the *Bible Review* :—"Whoever is ready to place his life in the hands of God, and is willing to be led by the spirit, need have no fear. Constantly let him desire the guidance of spirit, that he may know and do the right; then truly happy he is, for all things work together for his good."

"There cannot be any growth without *liberty*. Our ancestors freed religious thought and we have a wonderful religion, but they put a heavy chain on the feet of society and our society is in a word, *horrid diabolical.* In the West society always had freedom and look at them. On the other hand, look at their

religion. Liberty is the first condition of growth. Just as man must have liberty to think and speak, so he must have liberty in food, dress and marriage and in every other thing, so long as he does not injure others. "We talk foolishly against material civilisation. The grapes are sour. Even taking all that foolishness for granted, in all India there are, say, a hundred thousand really spiritual men and women. Now for the spiritualisation of these, must three hundred millions be sunk in savagery and starvation?... ...Material civilization nay even luxury, is necessary, to create work for the poor. Bread, bread. I do not believe in a God who cannot give me bread here, giving me eternal bliss in heaven! Pooh!! India is to be raised, the poor are to be fed, education is to be spread and the evil of priestcraft is to be removed. No priestcraft—no social tyranny, more bread, more opportunity for everybody. None deserves liberty who is not ready to give liberty.......Can you make a European society with India's religion? I believe it is possible and must be.

"Have fire and spread all over. Work, work. Be the servant while leading, be unselfish, and never listen to one friend in private accusing another.

"*Work, work, for to work only for the good of others is life.*

"I want there should be no hypocrisy, no jesuitism, no roguery, I have depended always on the Lord, always on truth broad as the light of day....Take care, beware of everything that is untrue, stick to truth and we will succeed, may be slowly but surely. Work on, Brave boys, work as if I never existed. Work as if on each of you depended the whole work. Fifty centuries are looking on you, the future of India depends on you. Work on."—Extracts from an *Epistle of Swami Vivekananda.*

"To these visitors from beyond the seas (Hindu Teachers who have gone to America) we owe much in the way of more liberal thought—broader, more generous and not unfrequently more Christ-like views of men and things......Men who have mastered this science of knowing God are colled *Brahma-jnanis.* They are reputed to have attained to that stage of development—of evolution—where they are able by interior perception to gain direct knowledge of spiritual realities. These men represent for the Hindu the culmination, the full development of human life. They alone are esteemed to be genuine teachers and real guides, who cannot err. For they alone perceive the spiritual foundation upon which the material world rests. The *Jnanis* stand for the highest and most sacred ideas of the Indian civilization—for all that is finest, noblest and purest in it. They are the efflorescence of the life of the nation, the life of the nation as a whole, not any sect, creed or division of it. To them all external religious forms are alike. The Brahmin, the Buddhist, the Christian, the Mohammedan or the Agnostic are to them the same. Development of character and aptitude for receiving spiritual instruction are the only credentials which they regard. The most enlightened men of India have also gone and still go to the *Jnanis* when seeking spiritual light; for it is said, they can always be found by earnest seekers for truth. Still, as of old, their prayer is,

"O Saint, teach us, for thou art the way, and there is no other for us.

O Saint, thou art the way, thou art the way."—*Maitrayana Upanishad.*

—— Mr., Phelps on "A Representative Hindu" (Mr., P. Ramanatham) in the "Open Court."

"*The Lord flows into the spirits of angels and of men.*"—*Swedenborg.*

"When the Spirit chooses you for its scribe to publish some commandmemt, it makes you odious to men and men odious to you and you shall accept that loathsomeness with joy. The moth must fly to the lamp, and you must solve those questions though you die."—*Emerson on Inspiration.*

"Enthusiasm in the true acceptation of the word, is, when that part of the soul which is above intellect is excited to the Gods, and thence derives its inspiration."—*The Mystic Sage to Lord Lytton* (*vide* '*Zanoni.*')

"Woe-Woe to him who treads through guilt to Truth!"—*Schiller's 'The Veiled Image at Sais.'*

# "மதிவளர்வித்தை" அல்லது, ஸ்ரீவித்தை.

## IV. "என்னும் என்னுமென்னுதே! பொன்னும் பொன்னும்பொன்னுமே!"

"நம்பினுற்கைவிடாத நாதன்தாள் பற்றும்பற்று."

"நம்பிக்கெடாத நம்பிக்கை"—"நம்பிக் கெட்டாரில்லை."

—⁂—

மலைவளர்காதலி.

"பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள் - பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டுதவிசுண்டு திட்டாந்த மாகயம - படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டுஞானமாங் கதிருண்டு சதிருண்டு - காயசித்திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின்ருளிற் - கருத்தொன் றுமுண்டாகுமேல்
நதியுண்டகடலெனச் சமயத்தையுண்டபர - ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்த மோனமே - நானெனுமகந்தை தீர்த்தென்
மதியுண்டமதியான மதிவதனவல்லியே - மதுசூதனன்தங்கையே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை - வளர்காதலிப்பெணுமையே."—தாயுமானவர்.

"தூலசூட் சுமவஞ் ஞானந் தோன் றுமூன் றவத்தை தாமும்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேனுன்
ஆலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே."

"எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று
சொல்லாதே! சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ!
† பல்லார்முன் றசமன் றன்னை பார்ப்பதுந் தனைக்கொண் டேதான்
அல்லாமற் பதினென் ருனு மவனிடத் துண்டோ பாராய்."

"மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற ‡வகையெலாம் பொய்யாமே
தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண்டோ
சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமல்
தூய சத்துச்சித் தாநந்த பூரண சொரூபமா யிருப்பாயே."
—கைவல்லியநவநீதம்.

"பற்றற்ருர் பற்ருகப் பற்றி நிற்குமவன்" நற்ருளையே சரணமென்று நம்பியிருப்பார்க்கு எத்தாலும் துன்பம் வருவதில்லை. பக்திசிரத்தை வேண்டுமென்ருல், 'நம்மவர்களுக்குள்ளிருக்கும் மூடபக்தி போதாதா'? என்று கேட்பார்கள். அப்பா! மூடபக்தியைச் சில

† ஒன்பதுபேர் முன்னிலையில் பத்தாமவன் தன்னை மறந்து காணுேமென்று தேடிப் பின்னர் பத்தாமவன் தானேயென்று தன்னைப் பார்த்தறிந்துகொள்வது தனைக்கொண்டே யன்றி பதினோராவது மனிதன் ஒருவன் அவனிடத்துண்டானதில்லை; அதுபோல சுயஞ்சோதியாயிருக்குந் தன்னை யறிவது தனைக் கொண்டேயன்றி வேருல்ல.

‡ 'மகத்' தத்துவம், அகங்காரதத்துவம், பஞ்சதன்மாத்திராதி ரூபங்களான ஜகத்தனைத்தையும் 'வகையெலாம்' என்ருர்.

கித்துக் கூறவாவது சிலாக்கியமென்று சொல்லவாவது கருதினேனில்லை. உண்மையை யுள்ளபடி யுணர்ந்தனுபவிக்குமட்டும் எல்லாரும் ஒருவிதத்தில் ஏதோ நம்பிக்கையாகத்தான் வாழ்நாளைத் தள்ளிவருகிறார்கள். தத்துவாராய்ச்சிசெய்து தத்துவங்களை நேர்நேராக்கண்டு களைந்து உண்மையை யுள்ளபடி யறிவது எல்லாருக்கும் சாத்தியமன்று. எக்காலத்தும் எந்தயுகத்திலும் இந்த அபாரசக்தியுள்ளவர்கள் வெகு சொற்பமாகவே யிருப்பார்கள். ஆனால் பகவான் அவருடைய குழந்தைகளிடத்து பாரபக்ஷமின்றி எல்லாரையும் சமமாகப் பார்த்து அவரவர் பக்திக்குத் தக்கபடி படியளந்து வருகிறார். இதை யுண்மையாக உள்ள படி சொல்லவேண்டுமானால், அவர் "படியளக்கிறார்" என்பது உபசாரவார்த்தை. அவர் கருணாசமுத்திரம், அவர்கருணைக்கோர் அளவில்லை; காலதேசவரையறையுமில்லை. ஆனால் "பால் ஆறாக வோடினாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்கவேணு"மென்று சொல்கிறகதை யாக கிஞ்சிஜ்ஞத்துவ ஜீவன்களாகிய நாம் அவர் மகிமையை யுள்ளபடி யுணரமாட்டாமல் நம் அற்பத்தன்மைக்கேற்க அவரையும் அற்பமாக நினைத்து, அவருக்கு அளவிலாக் கருணையிருந் தும் நமக்கு அளந்துகொடுத்து செட்டியார்-சரக்கு-வியாபாரம்போல் அவரும் வியாபாரம் செய்கிறாரென்று தப்பாகவெண்ணி, நமது எண்ணமே திண்ணமாக அதையே உண்மை யென்று நம்பி வீணேகிடந்துழல்கிறோம். பால் சமுத்திரமாக நிறைந்திருந்தாலும், மொண்டு சாப்பிடவேண்டியவன் அவன் கைப்பாத்திரத்திற்கும் வாயளவுக்கும் தக்கபடி தானே யெடு த்து சாப்பிடுவான்!. உழக்குப் பாத்திரத்தை க்ஷீராப்தியில் போட்டெடுத்தால் உழக்குப் பால்தான் அதில் வருமேயன்றி, உழக்குப் பாத்திரத்தில் பதக்குப்பால் மொண்டுகொண்டு வந்தவர் எவருமில்லையே! நரி தன் வாலைக்கொண்டு சமுத்திர ஆழம் பார்க்கப்போனால், இவ் வளவுதான் அதன் ஆழமென்று வாலையாட்டும். அதுபோல நாமும் ஆணவமயக்கத்திலே, அண்டபிண்டமெல்லா மொன்றாயிருக்கு மீசுவரனையும் அணுப்பிரமாணமாக வறிகிறோம். செக்கில் கட்டினமாடு இராப்பகலாக என்னதான் நடந்தாலும் செக்கு வட்டத்துக்கப்பால் போகமாட்டாமல் அதையே சுற்றிச்சுற்றி வருவதுபோல, கருமபந்தத்தால் கட்டுண்ட நாமும், பிறக்கிறதும் இறக்கிறதுமாக உலகம் சுழல்வதன்றி அப்பாலே யொன்றையும் காணோமென்கிறோம். மஞ்சக்காமாலை பிடித்தவன் உலகெல்லாம் மஞ்சள்நிறமாயிருக்கிற தென்னுமாப்போலும், தட்டாமாலைசுற்றின குழந்தை உலகமெல்லாம் சுழன்றுவருகிறதென் று சொல்வதுபோலவும், மாயைமயக்கிலகப்பட்ட ஜீவன் மாயையைத் தள்ளிப்பார்க்கத் தெரியாமல், நேற்றுக்கிருந்தா ரின்றைக்கிருப்பதில்லை, இன்றைக்கிருப்பார் நாளைக்கிருப்ப தில்லை; எல்லாம் போக்கும் வரத்துமாயிருக்கிறதன்றி நிலையாகவிருப்ப தொன்றையும் காணோமென்று கண்டு மயங்குகிறான். நிலையாய் நித்தியமாயுள்ள பொருளொன்று இதற் கெல்லாமாதாரபூதமாயில்லாவிட்டால் தான்உலகமென்று சொல்லும் இந்திரஜால மகேந் திரஜாலக் கூத்தெல்லாம் காணமுடியாதென்று உள்ளூறவுணர்ந்து உண்மையை யுள்ளபடி யறியமாட்டாது அஜ்ஞான வாசனையால் "ஒன்றுமறியேன், அறியேன்" என்றரற்றி யழுதுகொண்டு திரிகிறான். "ஒன்றுமறியேன்" என்றுரைக்கும் தன்னறியாமையை யறிந்த அறிவு தானாயிருந்தும், "ஆணவம், மாயை, கர்மம்" என்னும் மும்மலங்களும் அவனை அவ் வளவுதூரம் தன்னுள் திரும்பிப்பார்க்கவொட்டாமல் கரகரவென்று கையைப்பிடித்திழுத் துக்கொண்டு "மத்திழுக்கிறமாதிரி"யாகச் சுற்றுகிறதும், சுற்றுமயக்கம் தாங்கப்படாத

போது அவனை அஜ்ஞானவெளியில் இளைப்பாறவிட்டு, எப்பொழுது கண்விழிக்கப்போகிறு னென்று காத்திருந்து மறுபடியும் முன்போல "விஷயம்" எனும் தன் விஷமக்கையை நீட்டி அவன் கருமக்கையைப் பிடித்துக்கொண்டு "மத்திழுக்கிறதும்" (விஷயவாசனையில் கர்த்தா போக்தாவென்றபிமானித்துழலச் செய்கிறதும்) ஆக இப்படி பொம்மலாட்ட மாட்டுகிறது. இந்தப் பிரபஞ்சநாடகத்துக்கு சூத்திரதாரி யாரென்றுகேட்டால் அவன்தான் ஈசுவரன். அவன் மாயையைத் தன்வசப்படுத்திக்கொண்டு "ஆவரணம்" என்கிற திரைச்சீலையும், "விக்ஷேபம்" என்கிற மத்தாப்பு வெளிச்சமும் கொண்டு "அஜ்ஞான அந்தகாரம்" என் னும் இருள்வெளியில் இப்பிர்பஞ்சநாடக மியற்றிவருகிருன்.

"ஓடமாமுடலிதென்று உண்மையிலோராரே
வேடமாமிப்பிறவி யுலகுமோர் நடர்க்களமாம்
வேடம்போட்டாடவந்த நாடகன் சீவன்தானே
ஆடவன் ஆங்காரி ஓட்டுவன் ஓங்காரி."

"ஓங்காரியவள் தானே ஆங்காரியாயினள்
ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றெடுத்தாள்
ஆங்காரிய மெல்லாம் ஐவர்தந்தொழிலாம்
ஆங்காரமழிந்தாலது ஓங்காரமாமே."

இந்த ஓங்கார ரூபமாயுள்ள தொன்றெதுவோ அதுவே சகுணப் பிரம்மம், ஈசுவரன், தேவி, பிரகிருதி. இது வியக்தம் (காணப்படத்தக்கது), அவ்வியக்தம் (காணப்படத்தகாதது) என்று இருவகையாம். வியக்தப்பொருளைக் கண்டு தெளிந்து கொண்டாலன்றி அவ்வியக் தத்தை யறிந்துணர்வது கூடாது. வியக்தப்பொருள் "ஓங்கார" மானல்; அவ்வியக்தப் பொருள் "ஓம்" † என்று மட்டும் சொல்லப்படுவதாம். "ஓங்கார"த்துக்கு ரூபமுண்டு. "ஓம்" என்பது நாத மாத்திரையாக நிற்கும். ஓம் என்னும் பிரணவ சப்தத்துக்கு ஐந்து அங்கங்களுண்டு. அவை அ (அகாரம்), உ (உகாரம்), ம் (மகாரம்), நாதம், விந்து; இவ் வைந்துமமைந்துள்ளது ஓங்காரமாம். இதற்கப்பாலே "விந்துவுங்கடந்தநாதம்" என் றென்றுண்டு. அந்த நாதப்பொருளே உண்மைப்பொருளோடிரண்டறக் கலந்து அத்து விதமாக நிற்கும் ஆனந்தப்பொருளாம். இது ஆனந்தமுங் கடந்த "ஆனந்தாதீதம்" என்று சொல்லுவர். இதற்கு,

"அறிவார் பராசக்தியானந்த மென்பார்
அறிவார் அறிவுருவாமவளென்பார்
அறிவார் கருமமவளிச்சையென்பார்
அறிவார்பரனுமவளிடந்தானே."

என்பது திருமந்திரோபதேசம். இந்த ஆதிபராசக்தியை யெவன் உண்மையாக வுணர்ந் துய்ய உடல் பொருளாவியும் கொடுத்துழைக்கிருனே அவனே ஸ்ரீவித்தையுபாஸகன். இவளை யுள்ளபடி யுணர்த்தித் "தொட்டுக்காட்டும் வித்தையே" ஸ்ரீவித்தை. இதற்குச் "சிந்தாமணி * வித்தை" யென்றும் பேர். இந்த வித்தைக்கு அதிஷ்டான (காரண) தேவதை "சிந்தாமணி வித்யேசுவரி" என்றும் "ஸ்ரீவித்தை" யென்றும் மேலோர் சொல்வர். இது ஏட்டுச் சுரைக்காய் சமாசாரமல்ல. வெறும் ஏட்டுப்படிப்பாலும், வேத பாராயண மனப்பாடத்தாலும், மந்திர தந்திர யந்திராதி வேஷங்களாலும் இந்த வித்தை சித்திப்பதில்லை. இது எட்டிலெழுதாத வித்தை. ஸத்குரு கருணை கூர்ந்து "தொட்டுக்

* சிந்தையில் மணியாக ஒளிர்வது சிந்தாமணி.

† Comp. திருமந்திரம் :—" ஓமென்னுமோங்காரத்துள்ளே யொருமொழி, ஓமென்னுமோங் காரத்துள்ளே யுளபேதம், ஓமென்னுமோங்காரத்துள்ளே யருவுரு, ஓமென்னுமோங்கார மொண்முத்தி சித்தியே."

காட்டினாலன்றி" மற்றப்படி "சுட்டுப்போட்டாலும் வராது." "எழுதாத பொத்தகத்தி னேட்டின் பொருளைத், தெருளாத கன்னி தெளிந்திருந்தோத" இருதய சுத்தியோடும் சூக்ஷ்மபுத்தியோடும் அதிதீவர பக்திவிநயமாய் ஆத்மசிந்தனையோடுமிருந்தறியவேண்டிய வித்தையிது. குருமுகமாகவிருந்துழைத்து குருகடாக்ஷம் பெற்றாலன்றி இவ்வித்தை தன்னை யாரும் நெருங்கிவரவொட்டாது."

"அட்டாங்கம் பண்ணினாலும் நொட்டாங்கு பண்ணிபது
கிட்டாது கிட்டிவர வொட்டாது முட்டியது
பாயுமே - முனைதேயுமே - அது வோயுமே - உள்ளே தோயுமே!"

அப்படியானால் இந்த வித்தை சித்திப்பது தான் எப்படி யென்றாலோ! ஒன்று: ஸத்குருவை யடுத்து வழிபட்டு அவர் மனமுவக்கச்சேவிக்கக் கருணைவந்துழி காட்டும் வழியை யனுசரித்துப் பழகி மேன்மேலும் விர்த்தியடைய வேண்டும். அல்லது குண்டலியோகம் செய்து ஆறாதாரங்களின் நிலையையும் உள்ளபடி யுண்மையாகவுணர்ந்து நரம்புகள், நாடிகள், பிராணன் இவற்றின் இயல்பையும், சலநம், சங்கை, சங்கற்பம் இவற்றின் உற்பத்தி, க்ஷய, லய விசேஷங்களையும் தத்துவ தெரிசனங்கண்ட கண்ணால் உள்ளபடி யுற்றுநோக்கி யுணர்ந்து மேன்மேலுமாராய்ந்து கொண்டுபோனால் "குண்டலிசக்தி" யின்னதென்றும் அதன் தூக்கம், விழிப்பு இன்னதென்றும், அதன் ஆட்டமும் அதை ஆட்டும் விதமும் இப்படி யென்றும் இந்த மர்மங்களெல்லாந் தெரியவரும். இதற்கு அந்தர்முகாப்பியாசம் பலமாகவிருக்க வேண்டும். பஹிர்முகமனதைத் தன்னுள் திருப்பி உள்நோக்கால் உள்ளே நடப்பதை யாய்ந்துணரச் சக்தி மிக வேண்டும். அப்பியாசக்குறைவால் இந்தச் சக்தி கொஞ்சங்குறைவாயிருந்தால் அப்பியாசி தட்டுக்கெட்டுத் தலை தடுமாறிப்போவான். மயிரிழை தவறினாலும் மோசம் வந்துவிடும். ஆதலால் வெகு ஜாக்ரதையாக விருக்கவேண்டும். இந்த வழியில் போகிறவர்களுக்குப் பூர்ணமான ஹிருதய சுத்தியும், பூரண அன்பும், அமைதியும், "என்னைக் கொன்றாலும் நீயே சரண்! உன்னை நம்பினேன், நம்புகிறேன், நம்புவேன்" என்கிற அதிதீவர அற்புத பக்தி சிரத்தையும் "நம்பிக்கெடாத நம்பிக்கையும்" வேண்டும். "நம்பிக்கெடாத நம்பிக்கை"யாவது என்னவென்றால் நம்பினது வீண் போகாமல் நம்பினபடி பலிப்பதாம். நம்பிக்கை நம்பினபடி பலிப்பது உண்மையானாலும், இது ஆத்ம சக்தியாலன்றி வேறொன்றினாலும் ஆவதில்லை. உண்மையனுபவம் சித்திக்குமுன் இது ஏதோ பைத்தாரத்தனம்போல் தோன்றும். உள்ளனுபவம் தோன்றி உண்மையும் சித்தித்தால், "நம்பினால் நம்பினது பலிக்கும்" என்பது "ஆகாசத்தில் கல்லெறிந்தால் அது கட்டாயம் கீழே விழும்" என்பது எவ்வளவு உண்மையும் சகஜமுமாகத் தோன்றுகிறதோ, அவ்வளவு உண்மையும் சகஜமுமாகத் தோன்றும். மனோதர்மத்தின் உளவுமர்மமுணராமையால் இப்பொழுது கண்கட்டிவித்தைபோல் தோன்றுவது "மனதால் மனதையறிந்து மனமிறந்த மஹாத்துக்கள்" அனுக்ரஹத்தாலும், அவர்கள் ஸந்நிதிவிசேஷத்தாலும், பின்னர் தன் ஸ்வானுபவத்திலும், உண்மையாகவுள்ளது உள்ளபடி வெள்ளிடை மலைபோல் விளங்கும். இப்பொழுது என்ன சொன்னாலும் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டுக் கூச்சலும் போட்டு வேடிக்கை பார்ப்பதுபோல் தான் தோன்றும். எண்ணம் என்பது என்ன? அது எப்படி யுண்டாகிறது? எங்கே யுற்பத்தி? எப்படி விற்பத்தியாகிறது? கடைசியில் எங்கே எப்படி லயமாகிறது?

என்று பூரணமாக "சங்கற்ப-விகற்ப" சொரூபத்தை யுள்ளபடி யுணர்ந்துகொண்டால் அப்பொழுது மேலேறுவது இலகுவாகும். இலகுவானாலும் ஒரு விதத்தில் ஜாக்ரதையாக விருக்க வேண்டும். "மானுபிமானம்"—அதாவது "ஆசை-பற்று" இரண்டும் கூடாது. இவை கொஞ்சம் தலை காட்டினல், வந்தது மோசம்! ஒரு கண்ணிமைப்பொழுதில் உபாஸகன் உண்மைநிலை தவறித் தலைகால் தெரியாமல் அதோகதியாக அலறியடித்துக்கொண்டு கீழே விழுவன். இதற்கு விசுவாமித்திரர் கதையே சான்றும். எத்தனை தரம் அவர் தடுமாறி விழுந்தாலும், தான் விழுந்ததை விழுந்ததாக வெண்ணமல் அந்த நிமிஷம் முதல் பின்னும் பதின்மடங்கதிக ஊக்கத்தோடு தபசியற்றத் தொடங்கி, இறக்கம்விட்டேறிப் பழய நிலையில் நின்று பின்னும் தபசியற்றத் துணிந்தாரே அவர் துணிவே துணிவு! அவர் தீரமே தீரம்! மேநகை வந்து தன்னை ஆசைகாட்டி மோசம் செய்ய மோசம்போன விசுவாமித்திரர், அப்பொழுது அவருக்குப் பிறந்த குழந்தை (சாகுந்தலை)யைத் தாயன்போடும் தகப்பனென்கிற அபிமானம் பற்ற அவரிடம் கொடுக்கவந்ததை (அதற்குள் தான் மோசம் போனதைக் கண்டுகொண்ட விசுவாமித்திரர்) சிறிதும் பெற்றவாஞ்சை பாராட்டிப் பின்னும் பந்தத்துக் குள்ளாகாமல், அவள் கலைத்ததபசை நிலைக்கச் செய்துகொள்வதில் உடனே ஊக்கம் பிறந்தவராய் அவளையும் அவள் குழந்தையையும் திரஸ்கரித்து 'தாரேஷ-புத்ரேஷ' என்னுமிரண்டு ஈஷணைகளும் தன்னைப்பற்ருது பாதுகாத்துக்கொண்ட தீரமே தீரம்!

மேநகையின் ரூபலாவண்ணியத்தைக் கண்டு அவள் ஆசைவலையிற் கட்டுண்டதால் தபசெல்லாமிழந்தாலும், நேர்ந்துபோனதற்கஞ்சி தான் தொட்ட காரியத்தைக் கைநழுவ விடாது "மானுபிமானம்விட்டு" பின்னும் தபசியற்றவே துணிந்ததுணிபு இலேசாய்க் கொள்ளத்தக்கதல்ல. பக்குவமுதிராவிட்டாலும் "முயற்சி திருவினையாக்கும்" என்பதைக் கடைப்பிடித்து அவர் தான் பிடித்தபிடியைச் சாதித்துக்கொண்ட தீரரல்லவோ! மலபரிபாகம் வருமுன் முயற்சிப்போர் எவ்வளவு திடசித்தராயிருந்து வருமிடையூறுகளை யெல்லாம் வென்று செல்லவேண்டு மென்பதற்கு அவருடைய சரித்திரம் பிரத்தியக்ஷ உதாரணமாம். ஆகையால் "குண்டலியோகத்தில்" துணிந்து செல்பவர் பழ-வினையையும் சுட்டெரித்து சீக்கிரத்தில் வீடெய்தலாம்! ஆனல் அவர்கள் "மானுபிமானம்"="ஆசை-பற்று" இரண்டையும் அறவேபோக்கின ஆத்மநிஷ்டர்களாக விருக்கவேண்டும். அப்பொழுது தான் அவர்கள் கடைத்தேறுவார்கள். இல்லையேல், அவர்கள் மேலேறின உந்நத நிலைக்குத் தக்கபடி, எல்லாமிழந்து அதோகதியாக விழுந்து படாதபாடெல்லாம் பட்டுத் துன்புறுவார்கள். ஐயோ! இந்த வழியில் "ஆசை-பற்றிரண்டுமறநீக்காமல்" ஹிருதயசுத்தி சித்திக்குமுன் இந்த ஸ்ரீவித்தையில் (சுருக்கு வழியென்று) பிரவேசித்து மூளைகெட்டு, முழிபிதுங்கி, சிந்தை கலங்கி நொந்தலைவார் எத்தனைபேர்! இந்த வித்தையை அருமையான வித்தையென்று மூடி மூடிவைக்கத்தான் ஆஷாடபூதிகளெல்லாம் குட்டி தேவதைகளைக் கும்பிட்டு ஏதோ அற்பசித்திகள் வாய்த்ததைக்கொண்டு பண்டிதபாமரர்களையும் மயக்கித் தாங்களுங் கெட்டுப் பிறரையுங்கூடக் கெடுக்கிருர்கள்! இதில் உண்மையாக உள்ளபடி யுழைக்கிறவர்களுக்குச் சொல்லக்கூடாத இரகஸியம் ஒன்றுமில்லை. அந்த இரகஸியங்களை வெளியிடுவதால் மனேதர்மமறியாத மந்தமதிகள் பேராசைகொண்டு, அரைகுறையாக அர்த்தமானதைக்கொண்டு நானும் உபாசனை செய்கிறேனென்று மனதை ஆசைப்பட்டதொன்

றிலே செலுத்தி, வெளிவேஷம் போட்டுக்கொண்டு கொஞ்சகாலம் திரிந்தபின், மனோசங்கல்பம் முதிர முதிரப் புத்திகெட்டுச் சித்தந்தடுமாறி, கிணறுவெட்டப் போய் பூதம் புறப்பட்ட கதையாக, இவர்கள் ஒன்று நினைக்க அதுவொன்றாகப் பலிக்க, இவர் துர்எண்ணமே பேய் பூதங்களாக வந்து துரத்த அலறியடித்துக்கொண்டு தவிக்கிறார்கள். மேற்றிசையார் இப்பொழுதுதான் பேய் பூதங்களும் வேதாளங்களும் உண்மையென்று நம்பி ஆராயத் தலைப்பட்டிருக்கிறார்கள். † செத்துப்போனவர்களை சூக்ஷ்ம தேகத்தோடு பார்க்கலாமென்று பார்த்துவருகிற (Spiritualists) வர்களும், வியாதியெல்லாம் 'ஆதி'யிலே (மனோசங்கற்பத்திலே) யிருந்துண்டானதால், சங்கற்ப சக்தியால் வியாதிகளையெல்லாம் சொஸ்தம் செய்யலாமென்று மனோதர்மமர்மங்களை முற்றுமுணராது அரைகுறையாகவுணர்ந்த குற்றத்தால், பிறரை (வியாதி சொஸ்தமாக்கவென்று) வசீகரப்படுத்திப் பிறகு அவர்களை அந்த வசியபந்தத்திலிருந்தும் விடுவிக்கத்தெரியாமல் தலைவலிபோகத் திருகுவலி வந்ததென்னும் வசனம் போல், தேகவியாதிபோக மனோவியாதி பிடித்தலையச்செய்யு மனேகர்களும், (Hypnotists, Mental Healers) என்கிற பேர்களால் மனோதத்துவத்தை முற்றுமுணராமலும், சும்மாவிருக்கமாட்டாமலும் மதிமயங்கிக் கிடந்தலைகிறார்கள். அவர்கள் கெட்டலைவதுமன்றி, கொல்லத் தெருவிலூசிவிற்கப்போகும் கதையாக அவர்கள் அரைகுறையாகவறிந்த மர்மங்களைப் பிரமாதமாகப் பேரிட்டுத் தடபிடலாக விளம்பரம் செய்து இத்தேசத்தாருக்கு இரகசியமாக விற்றுவருகிறார்கள். இங்கேயும் அனேகர் உண்மைக்குழைக்க ஆற்றாமலோ வழிதெரியாமலோ அதை வாங்கி வாசித்து ஏதோ வசிய வித்தை கற்றுவருகிறதாகச் சொல்லிக்கொள்கிறார்கள்! "அரைப்படிப்பே ஆபத்துவிளைப்பதானால்" எல்லாவித்தையிலும் மேலானதும் எப்போதும் "பூரணவித்தையாகவே விளங்குவதும்" ஆகிய இந்த ஸ்ரீவித்தையை அரைகுறையாகவாவது, ஆசையும் பற்றுமறநீக்காமலாவது உபாசிப்போர் என்ன பாடுபடார்! இப்படி அவசரப்பட்டுத் திண்டாடிப்போன ஒருவர் கதையை 'ஷில்லர்' என்னும் தத்துவ ஞானியும் மஹாகவியுமான மேதாவி ஒரு உதாரணமாகச் சொல்லி ஒரு பாவியற்றியிருக்கிறார். உண்மையாக உள்ளபடி உண்மையை யுணரவேண்டுமென்று எகிப்துக்குச் சென்ற ஒரு அப்பியாசி, தனக்கு ஹிருதயசுத்தி வாய்க்குமட்டும் பொறுத்துழைத்துண்மையைக் காணப்பொறுக்காமல் அவசரப்பட்டு, அந்நியாயமாய் மனந்தடுமாறி மாண்டதை ஒரு கதையாக அவர் சொல்கிறார். தியசாபிகல் சொஸைட்டியைச் சேர்ந்தவர்களில் எத்தனைபேர் இப்படி அவசரப்பட்டுத் திண்டாடிப் போயிருக்கிறார்கள்!

"Woe-woe to him who treads through guilt to Truth!" என்று எச்சரிக்கிறார் 'ஷில்லர்' மஹாகவியின் "அப்பியாச யோகி." திருவனந்தபுரத்தில் அறிதுயிலமர்ந்து ஆனந்த நித்திரை செய்யும் (ஸ்ரீ தேவியம்சமாம்) அனந்தபத்மநாபரை யுபாசித்த "ஸ்ரீவாங்கள்" தன் யோகம் தவறிப்போம்போலிருந்த காலையில் கல்லுங்கரையப் புல்லும்பதறப் பரிதவித்தழுததோர் வசனந் தானும் போதுமே புத்தியுள்ளோர்க்கு! (சென்ற செப்டெம்பர் மாசத்துச் சஞ்சிகை 144-வது பக்கம் 2-வது பத்தியின் கடைசியில் பார்க்க.)

"சந்நியாசயோகந் தவறியே போய்விழுந்தால்
பின்னே யெனக்குப் பிழைப்புண்டோ மாதவரே!
என்ன பிழை செய்தாலும் என்றனைநீர் காத்தருளும்
பொன்னே கிருபையுடனே பூரணதயை செய்யுமய்யா!

† *Vide*, Potentia Organisation's copyright article on "THE WORLD BEYOND SCIENCE" by *Profesor Richet*, *President of the British Psychical Research Society*, published in the *Madras Mail* of 14th October last.

மண்ணும் விண்ணும் மறைந்தாலும் எண்ணும் கண்ணுமிழந்தாலும், உடலோடுயிருமே யொழிந்தாலும், (நித்தியாநித்தியவஸ்துவிவேகத்தால் நிச்சயித்தறிந்த), சுத்த முத்த நித்தப் பொருளாம் தேவி! "உனக்கு மெனக்குமழிவில்லை; உன்னைவிட்டாலெனக்குக் கதியுமில்லை" யென்று எந்த பக்தனொருவன் இருதய பூர்வகமாகத் தன் முழு நம்பிக்கையையும் தேவியிடம் வைத்து சலநசித்தமின்றி எல்லாப்பற்றும் விட்டு அதேயுறுதியாய்ப் பற்றி நிற்கிறானோ அவனைத் தேவி தன் அருமைக் குழந்தையென்றே மடியிலெடுத்துச் சொல்லமுதூட்டி யல்லல்போக்கி யழுக்கெலாந்துடைத்து அவள் உண்ணுமுலைப்பால் உண்ணவுங் கொடுத்து, கண்ணுங் கருத்துமழிந்தாலும், எண்ணுமெழுத்து மொழிந்தாலும், நண்ணும் பக்தன் உளம்புகுந்து எண்ணுந்தோறு மிடர்போக்கி, விண்ணும் மண்ணுமொண்ணுக வீணுகானஞ் செய்பவைப்பள். இது சத்தியம்,' சத்திபம், முக்காலும் சத்தியம் சொன்னேன். இன்பதுன்பங்களெல்லாங் கடந்து (கர்மபூமிதாண்டி) யோகபூமியடைந்து, ஞானபூமியேறும் முயற்சியில்குன்று மைந்தனுக்கவள் எப்போதுமுடனிருந்தே உண்மையைப் போதித்து வருவள். "ஸௌபாக்கிய லக்ஷ்மியவள் தானே வந்து முன்னின்று, ஓங்காரத்தோடென்னை யொன்றுபடச் சேர்த்துவைப்பள்!" இந்த நிலையில் நிற்பவர்க்குச் சொன்னதே இது:—

"இந்த மானுபிமானம் விட்டுத் தானாகி நின்றவர்க்குச்
சேனாதிபதிபோல ஞானாதிபதியுண்டு
பாருமே—சுட்டிக்காருமே—உள்ளேசேருமே—அதுபோதுமே!— அங்கே

சங்கையறவேநின்று பொங்கிவரும் பாலுண்டு
அங்கமிளப்பாறிக்கொண்டு தங்கபொம்மைப்போலவே
நில்லுமே—ஏதுஞ்சொல்லுமே—ஞானஞ்சொல்லுமே—யேதும்வெல்லுமே!"

இந்தநிலையில் நின்ற குண்டலியோக பக்தனொருவன் அவன் ஆற்றமாட்டாத் துன்புற்றுழி அம்பிகை (கருமபூமிகடந்து யோகபூமியிலேறிய) அவனுள்ளுக்குள்ளுருவாயிருந்து பிரத்தியக்ஷத்திற் கள்ளஞ் சிறிதுமின்றிச் சொன்னதோர் அமிர்தவசனமிது:—

"கடந்து(ம்)நீ யிங்ஙனே நடந்தது சிந்திக்கி லென்றன் பிள்ளாய்!
அடர்ந்துயர் வந்துறும் அசலமுந்தான்மாறு மறிந்துகொள்வாய்!
* படந்தூக்கியரடும் பாம்பது போலவுள்நீ சொல்வதைக்கேள்:—
† சடந்தூக்கியாடுமயில் போலவுனை யாட்டுவேணு னமர்ந்திரென்றாள்."

இந்த அசரீரிவாக்குத் தோன்றவும் அவன் சற்றுமுன் ஆற்றொணாது உள்ளந்துள்ளித் துடித்த துன்பமெலாம் காற்றிற் சிதறிய கார்மேகம் போலவும் சூரியனைக்கண்ட பனிபோலவும் இருந்தவிடந் தெரியாதோடவும், அவன் தான் துன்புற்றுத் தவித்ததாகக் கண்டது கனவோ நனவோவென்று ஐயுற்றுச் சிந்திக்கலானான். ஆகையால் "சேனாதிபதிபோல ஞானாதிபதியுண்டு" என்று சொன்னது அலங்காரமாகச் சொன்னதல்ல; உண்மையில் உள்ளபடி உள்ளதை யொளியாமற் சொன்னதன்றி வேறல்ல. இந்த நிலையடைந்தவரே நிலைதடுமாறாதுழைக்கத்தக்கவர். சிவாஜி மஹாராஜா முன்னுக்கு வந்தது இப்படித்தான். 'நெல்ஸன் தன் கடமையைச் செலுத்தியதும் இப்படியே'. கிளாட்ஸ்தன் உழைத்த அபார, உழைப்பின் மர்மமும் இதுவே. வாஷிங்டன், லின்கன் முதலான மேலோர் இராஜாங்

---

* Comp. "ஒத்தவந்நாதந்தோன்றியபொழுதே யொலியினுலுயர்ந்தெழுபடம்போல்
தத்துவஞ் சகல கேவலநீங்கித் தனையறிபவர்க்கிலேழுடம்."—நிஷ்டானுபூதி.

† "முகிற்குரலால் வெம்மை தீர்ந்து வாட்டமறு மயிலென்ன"—என்பது வசிஷ்ட கிரந்த வசனம்.
Comp. 'அன்னத்தின்மேலேறி யாடுமணி மயில்போ, லென்னத்தனென்னையுமாட்கொண்டான்'—
திருவாசகம்.

கந்தாங்கி ஸர்வஜனோபகாரமாகவுழைத்ததும் இந்நிலையிலிருந்தே. ஸ்ரீசங்கரர், ஸ்ரீஇராமானுஜர் முதலிய ஆசாரியஸ்வாமிகள் திக்விஜயம் செய்து ஜகத்குருமூர்த்தமாய் விளங்கியதும், அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர்போன்ற சைவசமயாசாரியர்கள் சைவசமயஸ்தாபனம்பண்ணி அற்புதச் செயல்களியற்றியதும் இந்நிலையிலிருந்தே. ஆதலால் ஊருக்குழைக்கு முத்தமர்கள் இந்நிலைபெற்றாலன்றி உள்ளபடியூருக்குழைக்கப் பாத்திரர்களாகார். ஆசை மிகுதியால் வீசை முறுக்கிக்கொண்டு தேசோபகாரியென்று முன்வந்தாலும் அவர்கள் அரிய பெரிய சமயங்களில் காரியகாரண தோரணையறியாது மயங்கித் தவித்துத் தம்மந்தஸ்தைக் காப்பாற்றிக்கொள்ளுமாறு ஜனங்களை வில்லங்கத்தில்கொண்டு மாட்டிவிடுவார்கள். ஊருக்குழைப்பது ஒரு விதமாகப்பார்த்தால் ஒரு பெரிய ஸந்நியாசம்; இன்னொரு விதமாகப் பார்த்தால் ஒரு பெரிய ஸமுஸாரம். இருவிதத்திலும் அவ்வழியிலுழைப்போர்க்கு யோக்யதை யிருக்கவேண்டும். அதாவது அவர்கள் நிர்வாணஸந்நியாசம் பூண்ட பூர்ண குடும்பிகளாக விருக்கவேண்டும். தேவியே பக்தர்களை இரக்ஷிக்கும் பொருட்டு பெரிய குடும்பியாக விருக்கிறபடியால் "ஓம் ஸதாசிவ குடும்பிந்நியை நமஃ" என்று பெரியோர்களான இருஷிகள் அவளை நமஸ்கரித்திருக்கிறார்கள். தேவியுடைய நாமங்களுக்கெல்லாம் இருஷி அகஸ்தியர். "அகங்கார விருத்தி" பூரணமாகவுண்டாகும் பொருட்டு "சண்டி" யுபாசனை கற்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த சண்டி தேவதை தேவர்களின் இடர் தீர்க்கும்பொருட்டென்றே ஸ்ரீ பார்வதி தேவியாரின் சந்த்ரவதனத்திலிருந்து எட்டுக்கைகளோடும் குதித்தாளென்று சொல்லியிருக்கிறது. இப்படி சண்டியின் உற்பத்தியே (நானற்ற பொருளாம் தேவியிடத்தில் 'நான்' என்னும் அகங்காரம் உண்டானதே) தேவதைகளை ரக்ஷிப்பதாம் பரசேவையின் பொருட்டு. 'பரசேவை'யாம் தேவரக்ஷணார்த்தம் (அசுரர்களை வதைப்பதாம்) துஷ்டநிக்ரக காரியம் முடிந்ததும், ('சண்டி' ஸ்ரீதேவியின் ஒரு அம்சமேயாதலால்) அவளோடைக்கியமாகி அமர்ந்து விடுகிறாள். 'அஹம்விருத்தி-பரசேவை' யிரண்டும் எப்பொழுது ஒன்றைவிட்டொன்று பிரிந்ததோ அப்பொழுதே இரண்டும் கெட்டுப் போகிறது. பரசேவை காரணமாகவில்லாத 'அஹம்விருத்தி' 'பிராணஹானி'க்கிடமாகிறது. அஹம்விருத்தியில்லாப் பரசேவை 'துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலன சக்தியற்ற'தாகிறது. 'அஹம்விருத்தி-பரசேவை' யிரண்டுமிணைபிரியாது சேர்ந்திருந்தாலோ முன்னிரண்டாவது பிரபந்தத்தில் விளக்கிக்காட்டியபடி 'ததாகார-சின்மாத்திர' சொரூபத்தைக் காட்டிவிடுகிறது. ததாகார-சின்மாத்திர சொரூபதரிசனம் கிடைத்தாலோ, சமுத்திர ராஜனைக்கிட்டின கங்கையானவள் எல்லாக்கவலையு மொழிந்தவளாய் ஆவலோடுஞ்சென்றவனையாலிங்கனஞ் செய்துகொண்டு அந்த ஆலிங்கனமாத்திரத்திலே தனது நாமரூபங்களையிழந்து இரண்டறக்கலந்து எப்படி அத்துவிதநிலை யுறுகிறாளோ அப்படிப்போல பூரணாஹங்கார புண்ணிய மூர்த்தியாகிய ஸ்ரீசண்டீசுவரியும் ஸ்ரீதேவியை ஆலிங்கனம் செய்துகொண்டு அவளோடு மிரண்டறக்கலந்த அத்துவிதநிலையில் தனது நாம-ரூப-வீரிய-சௌரியங்களையெல்லா மிழந்து சாந்தமூர்த்தியாய் பக்தஜன ரக்ஷண்யார்த்தம் ஸ்ரீஸதாசிவகுடும்பினியாக வமைந்து "இல்லறமல்லது நல்லறமன்று" என்று உலகத்துக்கெல்லாம் மௌனப்பிரசங்கம் செய்துகொண்டு சுகரூபியாய் அனுக்ரகரூப ஆத்மசக்தியாக விளங்குகிறாள். இந்த சித்சக்தியைப் பலர் பலவாறு பலபேரிட்டுத் தொழுது போற்றுகிறார்கள். ஆனால் உண்மையாக உள்ளபடி அனுபவத்திற் பார்த்தாலோ, ஸத் என்னும் சித் என்னும் ஆனந்தமென்னும் மூன்று இல்லை. ஸத்தே சித்தாகவும் அதுவேயானந்தமாகவும் தானேதானாய் இரண்டற்று விளங்குவதால் "ஸச்சிதானந்தம்" என்று மேலோர் நாமரூபகுணபேதரஹிதமான அகண்டப்பொருளை ஆத்மநிஷ்டர்கள் வழங்கும்பொருட்டுக் குறிப்பாலுரைப்பர்.

ஸத்யானந்த:

ஓம் தத்ஸத்.

# "HANGED BY CONVICTION."

*(From the French of Eugene Chavette.)*

# "கோபுரத்தின் மேலேறிய குரங்கு"

## அல்லது

## "மனதார மரணதண்டனைக் குடன்பட்டவன்."

(173-வது பக்கத்தொடர்ச்சி.)

அதனால் தான் நாமும் இப்பொழுது எந்த ஊரில் என்ன கொலை நடந்தது, எந்தக் கச்சேரியில் என்ன விசாரணை, எந்தப் பெண் பிள்ளை என்ன அக்கிரமம் செய்தாள்-என்று ஊர்வம் பையளக்கக் காசு கொடுத்துப் பத்திரிகைகளை வாங்கிப் படித்து, அதிலுள்ள "அக்கப்போர்" விசேஷங்களைக் கண்ணால் பாராவிட்டாலும் காதினால் கேட்டாவதானந்திக்கிறோம். அதனால்தான் ஊரில் யாராவது இறந்து விட்டாலும் அந்த சமாசாரத்தை முதல் முதல் நாமறிந்து பிறருக்குச் சொல்வதில் நமக்கவ்வளவு திருப்தி. "அய்யரவாள்! கேள்விப் பட்டீர்களா சமாசாரம் அந்த வீட்டு ராமுடுவுக்கு சீட்டுக்கிழித்தாய் விட்டதாம்! ஐயோ பாவம், ஸம்ஸாரி! குஞ்சும் குழந்தைகளும்! இந்த சங்கதி நான் சொன்னதாக மட்டும் வெளியிட வேண்டாம்" என்று பலத்தடவை பலர் சொல்லக் கேட்டும் நாமே சொல்லியு மிருக்கிறோம்.

—இப்படி இவ்வித வாழ்வை அனுத்துக் கொண்டு ஒரு நாள் காலையில் ராஜா கோபுரத்திலுட்கார்ந்துகொண்டிருந்தான். அப்பொழுது வைகாசி மாதம், சூரியோதயமாகிற சமயம். வானத்தில் ஒரு மேகங்கூட இராமல் தெளிவான சமுத்திரம் போல் ஆழ்ந்த நீலம் பாய்ந்திருந்தது. கிழக்கேமட்டும் இரண்டொரு மேகங்கள் சூரியபகவானை ஏற்றிக் கொண்டுபோக வந்த தங்கக்கால்கள் நிறுத்திய பவழரதம்போல் உருவெடுத்து இளவெயிலில் பிரகாசித்தன. எல்லா வஸ்துக்களும் தங்கமுலாம் பூசினாற்போல் விளங்கின. அப்பொழுது தற்செயலாய்த் தெற்கே திரும்பினான் தூக்குமரம் கண்ணுக்குப் புலப்பட்டது! அதைப் பார்த்தால் கோவில் தங்கதுவஜஸ்தம்பமோ என்று சந்தேகிக்கும்படி யிருந்தது. முன் அதைப் பார்த்தபோதிருந்த அருவருப்பும் விகாரமும் இப்பொழுது ராஜாவுக்கு உண்டாகவில்லை. அதை உற்றுப் பார்த்ததில் அது அப்பொழுதுதான புதிதாய் செய்யப்பட்ட தூக்குமரம் என்று ஏற்பட்டது. "என்ன முதல்தரமான தேக்கங் கட்டை! என்ன வேலைப்பாடு" என்று வியந்தான்.

"அதன் மேல் ஏறிவிட்டால்தான் என்ன உன்னதமானபதவி, அப்புறம், நமது பாக்கியமே பாக்கியம், நம்முடைய பாரம் நாலு பேரைப் பொறுத்ததாகிவிடும்!—கவலையே இல்லை—ஓகோ! இன்னொரு சங்கதியை மறந்து விட்டோமே! இந்தப் புதிய தூக்கு மரத்துக்கு நாம் தான் முதல் பலியாகி யிருக்கவேண்டும். ஏதோ நம்மைப் பிடித்த நல்லகாலமோ கெட்டகாலந்தானோ தப்பித்துக் கொண்டு விட்டோம். தப்பித்து என்னலாபத்தைக் கண்டோமென்றுதான் தெரியவில்லை. தூக்குப்போட்டிருந்தாலும் முதல் பலி என்று நம்முடைய பெயராவது நெடுநாளைக்கிருக்கும். ராஜாவையர் தூக்குமரம் என்றே அதைச் சொல்லுவார்கள். * நமக்குப்பின் அதில் சாகப்போகிற 1001 மனிதர்களுடைய பெயர்களையும் உலகத்தார் மறந்து விடுவார்கள். வலுவில் கிடைத்த இப்பேர்ப்பட்ட அரிய கௌரவத்தை ஏன் இழக்கவேண்டும்" என்று யோசனை பிறந்தது. அன்றிரவு பிச்சைக்குப் புறப்படுமுன்

* அக்காலத்தில் ஒரு மரத்தில் தூக்குப் போடப்பட்ட எல்லாருடைய ஊர் பெயர் எல்லாம் எழுதி வைப்பதசாத்தியமாதலால், முதல் முதல் தூக்குப் போடப் பட்டவன் பெயரை மட்டும் சொல்லி "ராஜாவையயர் உள்பட 500 பெயர்கள்" என்று சொல்வது வழக்கம்.

அந்தத் தூக்குமரத்தில் முற்றிலும் ஆசையுள்ளவனயிராவிட்டாலும் அதை ஒருவாறு மன்னித்துக் கண்ணால் பார்க்க இணங்கினன்.

மறுநாள் இனி இந்தக் கோபுரத்திலிருக்க முடியாதென்று தோற்றிற்று. வேறெந்த தேசத்துக்காவது கண்காணத இடத்துக்கு ஓடிப்போய்விட வேண்டுமென்று யோசித்தான். ஒருக்கால் ஓடிப்போகையில் யாராவது தன்னைக் கண்டுபிடித்துக் கச்சேரிக்குக் கொண்டுபோனாலும் தன் கட்சியைத் தானே வாதாடுவதற்குப் போதுமான ஞானமுண்டாவதற்காக இரண்டு மோகருக்களுக்கு சட்ட புஸ்தகங்களை வாங்கி வாசிக்க ஆரம்பித்தான். ராமாயணத்தையும் கீதையையும் தற்காலத்துக்குத் தூரக்கட்டி வைத்தான். அக்காலத்தில் வக்கீலாகப் போவதற்குப் பரீக்ஷை கொடுக்க வேண்டியதில்லை. அதிக சட்ட புஸ்தகங்களுமில்லை, எல்லாக் குற்றங்களுக்கும் ஏகமூலிகாப் பிரயோகமாக ஒரே மரணதண்டனை விதித்தால் சட்டங்கள் வளருவதற்கு இடமேது? ஒரு மாஸத்தில் ராஜா பெரிய வக்கீலானன். இந்த சட்ட புஸ்தகங்களைப் படித்ததில் ஒரு சங்கதி ஏற்பட்டது. எல்லா சட்டங்களும் மனிதனுடைய போக்கிரித்தனத்தை அடக்க ஏற்பட்டனவென்று நன்ருயறிந்தான். "அதாவது மனிதன் ஸ்வபாவத்தில் போக்கிரி என்பதை ஸ்தாபிக்கப்பட்ட விஷயமாக வைத்துக்கொண்டு அதன்மேல் சட்டங்கள் ஏற்பட்டன. ஒரு பரம துஷ்டனைக் கண்டு "அப்பா நீ வெகு நல்லவனயிற்றே" என்று விட்டால் அவன் தன துஷ்டத்தனத்தைக் காண்பிக்க அச்சப்படுகிருன். ஆனல் இந்த சட்டங்கள் நல்லவனயிருப்பவனைக்கூட "நீ போக்கிரித்தனம் பண்ணினல் உதைப்பேன்" என்று சொல்லி சட்டத்துக்குள்ளகப்படாத போக்கிரித்தனங்களைச் செய்யத் தூண்டுகின்றன. பிறகு இந்தப் புதிய போக்கிரித் தனத்தைக் கண்டிக்க இன்னெரு சட்டம் ஏற்படுத்துகிருர்கள். ஆனல் போக்கிரி யல்லாதவனுக்கோ? அவனுக்கும் சட்டங்களுக்கும் சம்பந்தமேது? அப்படி எல்லாருமே நல்லவர்களாயிருந்தால் சட்டங்கள் வேண்டியதில்லை. உலகத்தில் அப்படி இருப்பது சாத்தியமான விஷயமானலும், எவ்வளவுக் கெவ்வளவு நல்லவர்கள் அதிகமாயிருக்கிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு நியாயாதிகாரிகளுக்கு வேலை குறைவு. சர்க்காருக்கு லாபம், வக்கீலுக்கு நஷ்டம். ஆனல் இந்த இழவெல்லாம் நமக்கேன்? நம்மட்டுக்கு நாம் நல்லவனயிருந்தால் இந்தச் சட்டங்களுக்கு பயப்படுவானேன்? கோபூரத்திலொளிவானேன்? மறுபடி சட்டங்களைப் படிப்பானேன்?" என்றிப்படித் தாறுமாறு யோசித்துக் கடைசியில் "இனி இந்தப் போக்கிரி உலகத்துக்கும் அதன் சட்டங்களுக்கும் பயப்படாதவழியைத் தேடவேண்டு" மென்று தீர்மானித்தான். அன்றிரவெல்லாம் தனது சட்டப் புஸ்தகங்களுக்கு வாயுண்டாகித் தன்னை மிரட்டுவது போலும் சங்கிலிகளைக்கொண்டு அப்புஸ்தகங்கள் தன்னைக் கட்டுவதுபோலுமக கனவுகள் கண்டு பயந்தான்.

இதற்குள் கோவில் தீக்ஷிதர்களெல்லாம் கோபுரத்துக்கு மேலண்டைப் புறத்தில் பெரிய கொட்டகை போட்டு யாகம் செய்து கொண்டிருந்தார்கள். நாலு நாளாக தீவட்டிகள் வைத்துக்கொண்டும், நெய், ஆலங்குச்சி அரசங்குச்சி, புரசங்குச்சி, ஆட்டிரைச்சி இவைகளை யெல்லாம் எரித்துக்கொண்டு மிருந்தமையால் அதனுலுண்டான புகைகளெல்லாம் மேல் காற்றுக்குப் பயந்து தாராளமாய் கோபுரத்துக்குள் சந்து பொந்துகளெல்லாம் நுழையவே, ராஜாவுக்கு அங்கு இருக்க இடமில்லாமல் திணறிப்போகும்படி நேரிட்டது. "ஊருக்குப் பயந்தவர்களெல்லாம் என் கோபுரத்தில் நுழைகிறதென்று ஏற்பட்டுவிட்டதா என்ன?" என்று புகைகளை அதட்டினன்—வைதான்—அவை போகிற வழியாயில்லை. தலைவலியும் இருமலும் வந்து விட்டன. இருமல் வந்தால் தன் குரலைக் காட்டாதிருப்பதற்காக மூக்கைப் பிடித்துக்கொண்டு அடக்குவதில் பிராணனுக்குவந்துவிட்டது. வௌவாலின் நாற்றமே சகியாதவனுக்கு நெய்யின் நாற்றம் சகிக்க முடியுமா? அப்பொழுது எல்லாவற்றையும் வெறுக்கலானன், "இந்த தேகம் தான் என்ன தேகம்! (கோபுரத்தின்மேல்) ஏறினல் குற்றம்! இறங்கினல் அபராதமா? அதிக புகச்சல் கூடாது; அதிக வெயில்

கூடாது; அதிக காற்றுக்கூடாது; அதிக மழைகூடாது—குறைந்த சாப்பாடு—கூடாது! இது சாகிறதற்கு எத்தனை வழிகள் வைத்திருக்கின்றன! இருமல் வந்தால் பிராணன் போய்விடுகிறது. இருமவேண்டாமென்று மூக்கைப் பிடித்துக் கொண்டால் பிராணன் போய்விடுகிறது! பட்டினிகிடந்தால் பிராணன் போய்விடுகிறது! பசியோடு வயிறு வெடிக்க சாப்பிட்டால் பிராணன் போய்விடுகிறது!—கலியாணம் பண்ணிக் கொள்வோமென்று திருடினாலும் பிராணன் போய்விடுகிறது! எல்லாச்சாவிலும் தூக்குப்போட்டிறப்போனுக்குக் கடசி நிமிசங்களில் ஓர்வித சுகமான உணர்வு உண்டாகிறதென்று வைத்திய சாஸ்திரிகள் கண்டுப்பிடித்திருக்கிறார்களாம்! இவ்வளவு சுகமான சாவு நமக்குக் கைக்கெட்டியும் வாய்க்கெட்டாமல் போனது நமது தௌர்ப்பாக்கியமே! அப்படித்தப் பித்தும் மேலின்னது செய்கிறதென்றுதான் தெரியவில்லை! வேறெங்கையாவது ஓடிப் போவோமென்றாலும் நாலு நாளாக வழி விடாமல் யாகஞ்செய்வதாகப் பாசாங்கு பண்ணிக்கொண்டு நம்மை மறித்துப் போட்டிருக்கிறார்கள். இதற்குள் பசியோ காதையடைக்கிறது. இவர்களையும் தப்பிக்கொண்டு ஓடிப்போனாலும வெளியில் போய் இன்ன செய்கிறதென்று தான் ஏற்படவில்லை, அயலூரில் போயும் இந்தக்கரண்டிக் காம்பு உத்தியோகம் வேண்டாம். வக்கீலா யிருப்போமென்றாலும் இத்தனை நாளாய் இந்த தீக்ஷிதர்களுடைய இரைச்சலுக்கும் அதட்டலுக்கும் பபந்து நடந்ததில் ஏற்கனவே இருந்த சொற்ப தைரியமும் போய் எதிர்த்துப் பேசும் திறமையை இழந்து விட்டோம். மேலும் எழுதப்படிக்கத் தெரிந்தவனெல்லாம் நான் வக்கீல் நீ வக்கில் என்று வருவதில் தொழில் மலிந்துகிடக்கிறது. ஏதாவது கையில் 2000 ரூபா ஆஸ்தியிருந்தால் கௌரவமாய் வக்கீலென்று பெயர் வைத்துக்கொண்டிருக்கலாம். ராமாயண சாஸ்திரிகளாயிருப்போமென்றால் அதற்கு இன்னும் இரண்டு அல்லது மூன்று வருஷங்களாவது காவியம் நாடகம் வியாகரணம் படித்தாகவேண்டும். பள்ளிக்கூடம் போகுவோமென்றால் நம்மிடத்தில் படிக்கிற பிள்ளைகளுக்கு நாம் தான் சோறுபோட வேண்டியிருக்கும் போலிருக்கிறது! இக்காலத்தின் கொடுமை இவ்வளவு கஷ்டப்பட்டு ஏதாவது சம்பாதித்தாலும் முன்பின் அறியாத ஊரில் நமக்குப் பெண்கொடுக்கமாட்டார்கள். நமது கௌரவத்துக்கு இந்த ஆண்டிப்பிச்சையே சரி, அம்மாமே கதி—ஐயோ! இதென்ன பசி!" என்று யோசிக்கும்போதே கோபுரத்தடியில் முணு முணு என்று மிருதுவான சப்தம் கேட்டது. அதென்னவென்றுஅறியும் பொருட்டு சந்தடி செய்யாமல் கீழேயிறங்கி இருட்டில் யாருமறியாமல் மறைவில் பதுங்கியிருந்தான். கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து விட்டு எல்லாரும் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள், ஒவ்வொருவரும் சாஸ்திரப்படி வீட்டுக்குப் போகுமுன் இரண்டொரு நிமிஷம் கோபுர வாசலில் உட்கார்ந்து தங்களுக்குத் துணைவந்த சிவகணங்களுக்கு உத்தரவு கொடுத்து விட்டு, சுவாமியைத் திரும்பிப்பார்த்துத் தங்கள் அந்தரங்க பிரார்த்தனையை வேண்டிக்கொண்டுபோனார்கள். அந்தச் சப்தம்தான் முணு முணு என்று கேட்டது.

முதலில் ஒரு செட்டிவந்தான். "சுவாமி! அடுத்தவீட்டு கோபாலு செட்டி குறைந்த விலைக்கு எண்ணெய் விற்று என் வியாபாரத்தைக்கெடுக்கிறான். அவனுடைய எண்ணெய்க் குடங்களை இன்றிரவு எலிகளைவிட்டு உருட்டிக் கவிழ்த்துவிட்டால் நாளைக்கு நான் உன் தலையில் ஒருகுடம் பாலைக் கவிழ்க்கிறேன்" என்று பிரார்த்தித்தான்.

அப்புறம் ஒரு ஏழைப்பார்ப்பான் வந்தான், "என்னுடைய பிள்ளைக்கு உபநயனம் செய்ய வேண்டும். 1201 ரூபா யாசகத்தில் சேர்ந்துவிட்டால் 200 ரூபா செலவழித்துக் குழைந்தைக்கு உபநயனத்தோடுகூட அதேபந்தலில் விவாகத்தையும் செய்து 1000 ரூபாயைப் பையனுக்கு வைத்துவிட்டு ஒரு ரூபாய்க்கு சுவாமிக்கு நெய்விளக்கேற்றிவிட்டு நான் காசியாத்திரை போகிறேன்" என்றான்.

அதன்பின் ராமாயணம் படிக்கவைத்த வக்கீல் வந்தார். "நடராஜா! எனக்கின்னும் ஒருவருஷத்துக்குள் "ராவ்பகதூர்" பட்டங் கிடைத்தால் தங்கள் நெற்றிக்கு வெள்ளியினால் விபூதிப்பட்டங் கட்டுகிறேன்" என்று வேண்டிக்கொண்டார்.

பிறகு சிவதர்மதீக்ஷதர் வந்தார் "என்னுடைய திருட்டுப்போன செம்பில் நாலுமோகறாக்கள் குறைகின்றனவே! அதகப்பட்டுவிட்டால் ஒரு பைசாவுக்குக் கற்பூரம் வாங்கிக் கொளுத்துகிறேன்" என்றார்.

அதற்குப் பின்னால் விபூதிருத்திராக்ஷங்கள் ஏராளமாயணிந்து சிவ, சிவ, என்று ஜபித்துக்கொண்டு ஒரு கிழவர்வந்து "சுவாமி! என்னை இப்படியே கைலாஸத்துக் கழைத்துக்கொண்டுபோகவேண்டும்" என்றார். ராஜா உடனே "இந்தக்கோபுரத்தின்மேலால்தான் வழி! இந்தக்ஷணமே அழைத்துக்கொள்ளுகிறேன் வா" என்று அதட்டவே, கிழவர் பிசாசென்று உளறியடித்து எட்டுக்குட்டிக் கரணம் போட்டுக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தார். அதுமுதல் கோவிலுக்குப்போவதை நிறுத்தினார்.

அப்பொழுது ராஜா யோசிக்கலானான்: "உலகத்தாரெல்லாம் நம்மைவிட அப்படியொன்றும் அதிக யோக்கியர்களாயிருக்கக் காணோமே! இவர்கள் தாமா நம்மை அயோக்கியனென்று தூக்குப்போட யத்தனித்தவர்கள்! அவன் கெட்டான் குடியன் எனக்கொரு மொந்தைபோடு என்பதுபோலிருக்கிறது" என்று வெறுப்புடன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கொஞ்ச தூரத்தில் கால்மெட்டி சப்தமும் கைவளையல் சப்தமும் கேட்டது. அது யாரென்று உற்றுப்பார்க்கையில் தான் கலியாணத்துக்காகப் பார்த்திருந்த பெண்ணும் அவள் தாயாரும் என்று ஏற்பட்டது. கோபுரத்துக்குள் நுழைந்ததும் அந்த அம்மாள் "சிவகாமித்தாயே! எந்தப் பாடுபட்டாவது ஒருகெடிகார அட்டிகையோடு காசுமாலையும் ஒரு ஆண்குழந்தையும் உண்டாகிவிட்டால் உன் காலுக்கு வெள்ளிச்சிலம்பு செய்கிறேன்" என்றாள். பின்னால் சற்றுத் தாமதித்துப்பெண் வந்தாள். அப்பொழுது, ராஜா "உலகத்தில் வேறொரு வருந்தான் நம்மை நினைக்கவில்லை! இவளுக்காகத்தானே நாம் இவ்வளவு கஷ்டப்பட்டோம், படுகிறோம், படப்போகிறோம், இவளாவது நம்மை நினைக்கிறாளா பார்ப்போம் என்று ஆவலோடிருக்கையில் "அம்மணீ, பரதேவதையே! என்னைத் தேடி வந்த ராஜாவை எங்கேயோ தூரத்திவிட்டாயே! அவன் அகப்பட்டால் அவனைத் தூக்குப்போடும்போதாவது நான் கண்ணால் பார்க்கக் கிடைக்குமா" என்று வருத்தமுற்றாள். உடனே ராஜாவுக்கு மயிர்க்கூச்செடுத்து, "நம்மேலெவ்வளவபிமானம்" என்று தன்னையும் மீறிக்கொஞ்சம் புன்சிரிப்புக்கொண்டான் "இதோ இருக்கிறேன், வருத்தப்படாதே" என்று சொல்வோமா என யோசிக்கும்போதே அவள் "ஒருவனைத் தூக்குப்போட்ட கயிற்றைப் பத்திரமாய் வைத்துப் பூசைசெய்தால் ஒரு வருஷத்துக்குள் அழகும் செல்வமும் வாய்ந்த புருஷன் கிடைப்பான் என்று சொல்லுகிறார்கள். அதற்காகத்தான் அவனைத் தூக்குப்போடுவதைப் பார்க்க ஆசைகொண்டிருக்கிறேன்" என்று முடித்தாள்.

உடனே ராஜாவுக்குப் புளிப்புவிட்டது. "விட்டதடீ உன்னாசை விளாம்பழத்தோட்டோடு" என்றான். அவனுக்கு வந்த கோபத்துக்களவில்லை. பிசாசறைவதுபோல் அவளை யறைந்துவிட யோசித்தான். ஆனால் உடனே கலகமுண்டாகிக் கும்பல் கூடிவிடுமென்று பயந்து சும்மாவிருந்தான். பைத்தியம்பிடித்தாற்போல் ஒன்றுந் தோன்றாது பிரமித்துநின்றான். இதற்குள் ஒரு தேவடியாள் அவ்வழியே வந்தாள். அவள் "என் தாயே! நாங்கள் உன் குழந்தைகள்! எங்கள் பிழைப்பைக் குடித்தனக்காரிகள் கெடுக்காதபடி பார்த்துக்கொள்வது உன் கடமை" என்றாள். "அடடா இத்தனைபேருக்குள் இவள்தான் கொஞ்சம் யோக்கியமானவள்" என்று அவளையே தேவிரூபமாக பாவித்து சாஷ்டாங்கமாய் இருட்டில் நமஸ்கரித்தான்.

அப்பொழுது அவனது மனதிருந்த நிலைமையை என்னென்று சொல்வோம். இடிவிழுந்தாற்போலிருந்தது. அங்கிருப்பதுதான் தானோ வேறு யாராவதோ என்று சந்தேகித்தான். இத்தனைநாளாயிருந்த வாழ்வெல்லாம் கனவுபோல் தோன்றிற்று. தான் யாரோ புதிய மனிதன்போலிருந்தது. இப்படி கொஞ்சநேரம் சென்றபிறகு சற்றுமுன் நடந்ததெல்லாம் சந்தேகமில்லாமல் உண்மைதானென்று ஒவ்வொன்றாய் மறுபடியும் அப்பொழுதுதான் நடப்பதுபோல அவ்வளவு தெளிவாய் ஞாபகத்துக்கு வந்தது. "சீ!

இதென்ன வெட்கங்கெட்ட ஜன்மம்" என்றான். தன்னை யாராவது கண்டுபிடித்துத் தூக்குப்போட்டாலும் நலம்தானென்று எண்ணினான். பசி அசாத்தியமாயிருந்தது. கோபுரத்தடியில் யாகம்செய்யும் தீக்ஷதர்கள் தன்னைக் கண்டுபிடிக்கட்டுமென்றே தலையில் முக்காடில்லாமல் பிச்சைக்குக் கிளம்பினான். அப்படியும் யாரும் கண்டுபிடிக்கவில்லை. அன்றைக்கு இவனுக்குப் புளித்தசோறுதான் கிடைத்தது. பசியின்கொடுமை இரண்டுவாயெடுத்துப் போட்டுக்கொண்டான். பல் கொட்டுண்டுபோகும்போலிருந்தது. இருக்கிற பல் உதிர்ந்துவிட்டால் அப்புறம் தங்கக்கட்டு கட்டுவதற்குக்கூடக் கையில் மோகருக்களில்லையே" என்று சொல்லி அந்த சோற்றை அப்படியே நாய்க்குப் போட்டுவிட்டுப் பட்டினியாய் கோபுரத்துக்குத் திரும்பினான். "நன்றாய்ப் பசிக்கட்டும்; இந்தத் திருட்டுக்கட்டைக்குச் சோறுகூடவா" என்று வைராக்கியத்தோடிருந்தான். அன்று தூக்கம்பிடிக்க வில்லை. வெள்ளிக்குடத்திலிருந்து பால் சொரிவதுபோல் சந்திரனிடத்திலிருந்து நிலவு பொழிந்து கொண்டிருந்தது. ஆகாயத்தில் வெண்மேகங்கள், சமுத்திரக் கரையில் காற்றடித்துப் படிப்படியாய்ப் படிந்துகிடக்கும் மணல் திட்டுகளைப்போல், துண்டு துண்டாக மிதந்துகொண்டிருந்தன. "இந்தச் சந்திரன், மேகம், நக்ஷத்திரங்கள் இவைகள் தாம் எப்பொழுதும் நம்மைப் பரிஹஸித்துப் புன்சிரிப்புக்கொள்வதுபோலிருக்கின்றன. மரத்தின்மேலேறிப் பழம்பறித்துத்தின்பவன் கீழ்நிற்கும நொண்டியைப் பார்த்து ஏளனம்செய்வதுபோலிருக்கின்றது. உங்களிழவு ரஹஸியத்தை எனக்குக் கொஞ்சம் சொல்லக்கூடாதா? நானும் உங்கள் சந்தோஷத்தில் பாதியாவது அடையமாட்டேனா? எந்தப் பாடுபட்டாவது அந்த ரஹஸ்யத்தை நான் கற்றுக்கொண்டே தீருவேன" என்று உறுதியாய் உட்கார்ந்தான். பொழுதுபோவது தெரியாமல் யோசனையிலாழ்ந்தான். வந்த பசியும் பறந்துபோய்விட்டது. தன் வாழ்நாளையெல்லாம் ஒருதரம் திருப்பிப் பார்வையிட்டான் "நமக்கு வயது 26." இந்த இருபத்தாறு வருஷங்களாக ஒருநாளாவது "இன்றைக்கு யதார்த்தத்தில் சுகப்பட்டோம்" என்று மனது திருப்தியாய்ச் சொல்லும்படியிருந்ததுண்டா? பிறந்தவுடனே என்னமாக இருந்தோமென்று ஞாபகமில்லை, ஆனால் அப்பொழுதும் அழுததாகத்தான் சொல்லுகிறார்கள். பள்ளிக்கூடத்துக்குப் போகுநாளெல்லாம் வாத்தியாரிடத்தில் பயம், கோலிக்குண்டு ஆடினால் அப்பாபார்த்துவிடப் போகிறாரே என்று பயம். புஸ்தகம் கிழிந்துவிட்டால் வேறுபுஸ்தகத்துக்கு அப்பாவைக் காசுகேட்கப் பயம். புஸ்தகமில்லாமல் பள்ளிக்கூடத்துக்குப் போகப் பயம். பள்ளிக்கூடத்தைவிட்டுக் கோவிலுக்குவந்தால் காலம் தவறாமல் தீர்த்தம்கொண்டுவர வேண்டுமே என்கிற கவலை. ஒருநாளைக்குக் கொஞ்சம் தூங்கிவிட்டால் உதை! அப்புறம் நாடகத்தில் வேஷம் பலிக்கவேண்டுமே என்கிற கவலை. ஒரு நாளைக்கு ஜனங்கள் "சபாஷ்" என்று சொல்லாவிட்டால் துக்கம். அதற்குப் பிறகு வேளைதவறாமல் சமையல் கோணாமலிருக்க வேண்டுமே என்கிற கவலை. ஒருவேளை சமயல் பிசகினால் தீக்ஷதர்களிடம் உதை. அப்புறம் பெண்டாட்டி தேடுகிற இழவு! அதற்குப் பணம் சம்பாதித்த கலியாணம்! இப்பொழுது கோபுரத்திலிருக்கிற அழகு! இப்படி நாம்தான் தலையிலெழுதியபடி கஷ்டப்படுகிறோம்! உலகத்தில் வேறெவனாவது சுகப்படுகிறானா என்றால் அதுவுமில்லை. கடைக்குக்கடை ஆளிருக்கிறான் என்பதுபோல் எல்லாரும் நமக்கண்ணனாகவே யிருக்கிறார்கள். நம்முடைய வக்கீலுக்குப் பணமிருக்கிறது மெத்தைவீடு இருக்கிறது. பெண்டாட்டிபிள்ளை யிருக்கிறது—"ராவ்பகதூர்" பட்டமில்லையாம்! இந்த இழவுக்கு என்னபண்ணுகிறது. இப்படியே தான் எல்லாரும்! வெளிக்கு எவ்வளவு டம்பமாக நாலுகுதிரைவண்டி போட்டிருக்கிறவனையும் உட்புகுந்துபார்த்தால் ஒன்றுமில்லை. போலீஸ் ஜவான் திருடனைச்செய்வதுபோல் கன்னத்திலறைந்து "உண்மையைச் சொல்லுகிறாயா உரித்துவிடவா" என்று கேட்டால் எப்பேர்ப்பட்ட மகாராஜாவும் "ஆமாம்! என்னவோ உங்களுக்கு என்னைப்பார்த்தால் மலைப்பாயிருக்கிறதே ஒழிய இவைகளையெல்லாம் வைத்தாண்டு அனுபவிக்கிற எனக்கு இவைகளில் யாதொரு சுகமுமிருக்கிறதாகத் தெரியவில்லை. வீணாய் ஆனந்தத்தில் மூழ்கினவன்போல் நடித்து உங்களை ஏமாற்றுகிறேன். நீங்கள் என்னைப்பார்த்துப் பொறா

மைப்படுகிறீர்கள் என்று அறிந்துகொள்வதில் ஓர்வித திருப்தியடைந்தாலடையலாமேயொழிய, யதார்த்தத்தில் இங்கே வேறொன்றையுங் காணோம். சிலவிஷயங்களில் மற்றவர்களைக் காட்டிலும் எனக்கு துக்கங்கள் அதிகமேயொழிய குறைவில்லை" என்பான்.

"ஆனால் இவ்வாழ்க்கைக்கு ஒருபோதும் சுகமில்லை என்பதை நிச்சயமறிந்துகொண்டால் நாளைக்கே தூக்குமரத்துக்குப் போய் நம்மை இன்னாரென்று தெரிவித்துக்கொண்டு தூக்கிலேறிவிடலாமே" என்று கடைசி வார்த்தையை வாய்விட்டுச் சொல்லவே எதிரொலியும் "விடலாமே" என்றது. யாராவது இருட்டில் ஒளித்துக்கொண்டிருக்கிறார்களோ என்று சந்தேகித்து "திருடின பாபமாவது தொலையுமே" என்றான். அதுவும் "தொலையுமே" என்றது. அது எதிரொலியென்றறிந்துகொண்டு "சே! நீதானா!" என்றான். அதுவும் "சே! நீதானா!" என்றது. அப்பொழுது யோசித்தான் "இந்த எதிரொலிக்கிருக்கிற தைரியத்தைப்பார்! நாம் சொல்வதெற்கெல்லாம் பதில் சொல்லுகிறது. உலகமும் இப்படித்தான். நாம் செய்வதெற்கெல்லாம் பதில் செய்கிறது. நாம் ஒருவனை அடித்தால் நமக்கு அடிவிழுகிறது. நாம் திருடினால் நம்மைத் தூக்குப்போடுகிறார்கள். (இது மட்டும் அக்கிரமம், பதிலுக்கு நம்முடைய கந்தல் துணிகளைத் திருடிக்கொள்ளுகிறது தானே!) நாம் நல்லவனாயிருந்தால் பிறரும் நமக்கு நல்லவர்களா யிருக்கிறார்கள். ஆனால் ஒருதரம் கெட்டவன் என்று பெயரெடுத்த பிறகு நாம் இனி நல்லவன் என்று எங்கே பெயரெடுக்கப்போகிறோம். ஆகையால் இனிப் பிழைக்க வழியில்லாத இவ்வுலகத்தை விட்டுப் போய்விடவேண்டியதுதான்! அப்புறம் நம்முடைய எதிரொலிபோன்ற உலகமும் போய்விடுமா என்ன? ஆம் நம்மைப்பற்றின வரையில் போய்விடும்தான். ஆனால் எதிரொலி என்பது நம்மாலுண்டாவதுபோல் உலகமும் நம்மால்தான் உண்டாயிற்றா என்ன? நாம் செய்வதற்கெல்லாம் பதில்செய்வது உண்மையானால் நமமைப்பற்றினவரையில் நம்மால்தான் உண்டாயிற்று. நம்மாலுண்டான உலகத்தை விட நாம் பெரியவனல்லவா? ஆம் பெரியவன்தான்! அப்படியானால் அவ்வுலகத்தில் நாம் தேடவேண்டியதென்ன இருக்கிறது? நம்மைத்தவிர ஒன்றுமில்லை! (எங்கே போனாலும் இந்த இழவு 'நாம்' ஒன்று இருந்துகொண்டு கழுத்தையறுக்கிறது. இந்த 'நாம்' தான் இன்னாரென்று தெரியவில்லை) நம்மை நாமேதேடவேண்டிய அவசியமென்ன? அகப்பட்டுவிட்டால் தேடவேண்டியதில்லை! ஆனால் நம்மைத்தவிர பிறரால் நமக்கு யாதொரு சுக்முமில்லையா? சுகமட்டுமா, துக்கமுமில்லை, ஒன்றுமே யில்லை. அப்படியென்றால் உலகத்தில் புருஷார்த்தங்கள் என்று தேடுகிறார்களே அவைகளில் சுகமில்லையா? இருக்கிறதோ என்று பார்" என்று தனக்குத்தானே நமஸ்காரம் செய்துகொண்டும் தன்னைத் தானே ஆசீர்வதித்துக்கொண்டும் யோசித்தான்.

(இன்னும் வரும்.)

ஸ்ரீ ராஜநாயகி.

## THE STORIES OF MAHABHARATA – FOR CHILDREN.

(*Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer, B. A.*)

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக் குபயோகமாக எழுதப்பட்டன.

இரண்டாவது.

### சபாபருவம்.

### 1. வீமசேனன் சராசந்தனைக் கொன்றது.

பாண்டவர்கள் இந்திரப்பிரஸ்தத்தில் ஸ்ரீ கண்ணபிரானோடு ஐம்பொறியும் மனமும் போல ஒருமித்திருக்கும் காலத்தில் அங்கு மயன் என்னும் அசுரத்தச்சன் வந்து அருச்சுனனைப் பார்த்து, "ஐயா, நீயன்று என்னைக் காண்டவ வனத்தில் அக்கினியில் மாளாமல் காப்பாற்றினதற்கு மாறாக நான் உங்களுக்கோர் மண்டபம் அமைத்துக்கொடுக்க எண்ணுகின்றேன்; அதற்கு வேண்டிய இரத்தினங்கள் விந்து வென்னும் ஓர் தடாகத்தில் இருக்கின்றன. அவற்றைத் தருவித்துக் கொடுத்து மண்டபத்தை கட்டுவிக்க உத்திரவு கொடுப்பீராயின் என் சிற்பத்திறமை தெரியக் கட்டிக்கொடுப்பேன்," என்றனன்.

அவ்வாறே வேண்டிய இரத்தினங்களைக் கொணர்ந்து கொடுக்க நல்ல சுபதினத்தில் வேலைக்காரம்பித்து பதினைந்து நாளைக்குள்ளாக இந்திரசுபையைக் காட்டிலும் முதன்மை பெறும்படி அம்மண்டபத்தைக் கட்டி முடித்தான். அன்றியும் வீமனுக்கு ஒரு தண்டாயுதமும் அருச்சுனனுக்கு ஒரு சங்கப்படையும் பரிசாகக்கொடுத்துத் தன்னிருப்பிடத்துக்குத் திரும்பிச் சென்றான்.

பின்பு தருமபுத்திரர் அம்மண்டபத்தில் கிரகப்பிரவேசம் செய்து அங்கு இருக்கையில், ஒரு நாள் நாரதமுனிவர் அங்கு வந்தார். தருமபுத்திரர் அவருக்குத் தக்க உபசாரங்களைச் செய்து பணிந்து நிற்க, முனிவர் தருமநந்தனரைப்பார்த்து, "ஓ ராஜேந்திரா! உனது தந்தையாகிய பாண்டுவை நான் யெமபுரத்தில் கண்டேன். அப்போது உன்னைக் கொண்டு ராஜசூயயாகம் ஒன்று செய்விக்க வேண்டுமென்று என்னோடு சொன்னதனாலே தந்தையின் இஷ்டப்படியே நீ அந்த யாகத்தைச் செய்து முடித்தல்வேண்டும்," என்று சொல்லிப்போய்விட்டார். ஸ்ரீ கண்ணபிரானும் நாரதமுனிவர் சொல்லியபடியே தமக்கும் திருவுள்ளம் என்று சொல்லி அவ்விராசசூயத்தைத் தொடங்கு முன் நரமேதம் செய்யும் பொருட்டு எண்ணாயிரம் அரசர்களைப் பிடித்துச் சிறைவைத்திருக்கும் சராசந்தன் என்னும் மகதராசனைச் செயித்தல்வேண்டுமென்று கூறி, அதற்காக வீமார்ச்சுனர்களோடு தாமும் பிராமண வேஷம் பூண்டு அச்சராசந்தனைப்போய்க் கண்டார். அப்போது அவன் அவர்களது அங்க அடையாளங்களைக்கண்டு சந்தேகித்து "நீங்கள் யாவர்? இவ்வாறு மாறுவேஷம் கொண்டுவரக் காரணம் யாது?" என்று கேட்க, வாசுதேவர் உண்மையைக்கூறித் தாங்கள் அந்நகரத்தின் வளப்பங்களைக்காண வந்ததாகவும் சொன்னார். அதுகேட்டு அச்சராசந்தன், "என்னோடு போர் செய்வாரில்லாமையால் என் தோளிரண்டும் தினவெடுத்தன. இன்று உங்கள் மூவரில் எனக்குப் பலமுறையும் தோற்றோடின நீயும் எனக்கிளையவனுகிய அருச்சுனனும் ஒழிய என்னோடு பொருதவல்ல வீமனோடு போர்செய்ய எண்ணுகின்றேன்." என்றனன். அதற்கு அவர்கள் உடன்படச் சராசந்தன் மந்திரிகளையழைத்து மகனுக்கு முடி சூட்டிவிட்டுத் தான் போருக்கெழுந்து வந்து வீமனோடெதிர்க்க ஒருவருக்கொருவர் சளையாமல் இராப்பகல் இடைவிடாமல் பதினைந்து நாள்வரையில் சண்டை செய்தார்கள். இவ்வாறு ஒருவர்க்கொருவர் தோல்வியில்லாமல் சண்டைசெய்து முடிவில் வீமசேனன் சரசந்தனை இருகூறாகக்கிழித்துக் கிழித்தெறிந்தும் இறுகூரும் ஒன்றாக உயிர் பெற்றெழுந்து சண்டைசெய்யக் கடைசியில் ஸ்ரீ கண்ணபிரான் குறிப்பாயுணர்த்தத்தெரிந்து அவ்விரு கூற்றையும் காலும் தலையும் மாறியிட்டுக் கொன்று வீழ்த்தி வெற்றியடைந்தான்.

பின்பு அருச்சுனன் ஸ்ரீ கண்ணபிரானைப் பார்த்து, "ஐய, இச்சராசந்தன் இந்தவாறு உயிர் பெற்றெழுதற்குக் காரணம் யாது?" என்று கேட்க அவரும் சொல்லலுற்றார். "இச்சராசந்தன் தந்தை தனக்கு நெடுநாள் புத்திரரில்லாமையால் சண்ட கௌசிக முனிவரை அடுத்துத் தனக்குப் புத்திரனை அநுக்ரகிக்க வேண்டுமென்று கேட்க அவரும் அதற்கிணங்கி ஒரு கனியைகொடுத்து அதனை அவன் மனையாளுக்குக் கொடுக்கக் கட்டளையிட்டார். அவன் அதைத் தன்னிரண்டு மனைவியர்க்கும் ஆளுக்குப்பாதியாகப் பகிர்ந்து கொடுக்க அவர்களதனை யுண்டு கருத்தரித்து ஒருத்தி ஒருபாதிக்குழந்தையையும் மற்றொருத்தி மற்றொரு பாதிக்குழந்தையையும் பெற்றார்கள். அரசன் அது கண்டு பயந்து அக்குறையுடல்களை நகர்ப்புறத்தில் எறிந்து விடும்படி உத்திரவு செய்ய அவற்றை உண்ண வந்த சரை யென்னும் இராட்சசி இரண்டையும் சேர்க்க உடனே குழந்தை உயிர் பெற்றெழுந்தது. அதுகண்டு அவள் பயந்து அக்குழந்தையை அரசன் கையில் ஒப்பித்துப்போனாள். அதனால் அவனுக்குச் சராசந்தனென்னும் பெயருண்டாயிற்று. முனிவரது வரப்பிரசாதத்தினாலே இருகூறும் ஒன்றி உயிர் பெறுவானானான்." என்று கூறினர்.

பின்பு சிறையிருந்த அரசர்களை விடுவித்துத் தருமபுத்திரர் தம்மை அவரவர் இடங்களுக்கு அனுப்பிவிட்டு எதிர்கொண்டழைக்க எல்லோரும் இந்திரப்பிரஸ்தம சென்று சேர்ந்தார்கள்.

### 2. தருமபுத்திரர் இராஜசூயயாகம் செய்ததும் சிசுபாலனை ஸ்ரீ கண்ணபிரான் கொன்றதும்.

இந்திரப் பிரஸ்தத்துக்கு மீண்டு வந்தபின் இராஜசூயயாகக்தை செய்யக்கருதி ஸ்ரீ கண்ணபிரானோடு ஆலோசித்துத் திக்குவிசயத்துக்குத் தருமராசர் தன் தம்பிமார்கள் நால்வரையும் அனுப்பினான். அவர்களும் சென்று எண்டிசையில் உள்ள அரசர்கள் அனைவரையும் வென்று அளவற்ற நிதிகளைக் கொண்டு வந்து சேர்த்தார்கள். பின்பு தருமபுத்திரர் யாகத்துக்கு வேண்டிய பிரயத்தனங்களைச்செய்து அரசர்களுக்கெல்லாம் தூதர்களைப்போக்கி ஸ்ரீ கண்ணபிரானை அழைத்து வரும்படி நாரதமுனிவரையும் வேதவியாசர் முதலான முனிவர்களைக் கூட்டிக்கொண்டு வரும்படி உலூக முனிவரையும் அனுப்பினார். அவ்வாறே அனைவரும் இந்திரப்பிரஸ்தத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ கண்ணபிரான் தமயன் பலபத்திரரோடு எழுந்தருளினர். துரியோதனன், கண்ணன், சிசுபாலன் முதலான எல்லா அரசர்களும் வந்து சேர்ந்தார்கள். யுதிஷ்டிரரும் வேதவிதிப்படி யாகத்தைத் தொடங்கி நிர்விக்கினமாக நிறைவேற்றி வேதப்பிராமணர்களுக்கு அளவற்ற தானதர்மங்களைச் செய்தார். முனிவர்களெல்லோரும் மனமகிழ்ந்து ஆசீர்வதித்தார்கள். புலவர்கள் மங்களம் பாடினார்கள்.

பின்பு அங்கு வந்திருந்த அரசர்களைப்பூசிக்கக்கருதி அவர்களில் அக்கிர பூசைக்குரியவர் யாவரென்று தருமபுத்திரர் பீஷ்மரை வணங்கிகேட்க அவரும் வியாசமுனிவரைக்கேட்க வியாசர் ஸ்ரீகண்ணபிரானே உரியவர் என்று கூறுனார். அப்போது சேதிநாட்டரசனாகிய சிசுபாலன் எழுந்து வியாசரை முனிந்து ஸ்ரீகண்ணபிரானைப்பலவாறாக இகழ்ந்து 'இவனுக்கோ அக்ரபூசை செய்ய வெண்ணினீர்!' என்று இராச சபையில் நகைத்துக்கூறினான். அப்போது ஸ்ரீகண்ணபிரான் அடங்காத கோபங்கொண்டு சிசுபாலனை நோக்கி உன்பெருமையும் என் சிறுமையும் இனிப்போர்க்களத்தில் பார்ப்போம் யுத்தத்துக்கெழுகவென்று விளித்தனர். உடனே இருவரும் நகர்ப்புறம் சென்று தங்கள் தங்கள் தேர்மேற்கொண்டு அரசர்களனைவரும் கண்டு பிரமிக்க கடும்போர்செய்ய முடிவில் ஸ்ரீகண்ணபிரான் தமது திருக்கைச் சக்கிரத்தால் அச்சிசுபாலன் ஆவியைக் கவர்ந்தார். உடனே சிசுபாலன் உடலினின்று ஒரு சோதி யெழுந்து எண்டிசையும் விளக்கி ஸ்ரீ கண்ணபிரான் திருவடியில் வந்து அடங்கியது.

இவ்வற்புதத்தைக் கண்ட அந்தணர் முனிவர் அரசர் எல்லோரும் ஸ்ரீ கண்ணபிரானைப் பலவாறு புகழ்ந்து அச்சிசுபாலன் சரலாற்றைத் தெரிந்துகொள்ளும்படி வியாசமுனிவரை வேண்ட சர்வமும் உணர்ந்த வியாசமுனிவர் சொல்லத்தொடங்கினார். "கேளீர் முனிவர்களே. முன்னொருகாலத்தில் தூர்வாச முனிவர் திருமாலைத் தரிசிக்கும் பொருட்டு வைகுண்டம் செல்ல அங்கு துவாரபாலகர் இதுசமபமன்று இப்போது உள்ளே செல்லத்தகாதென்று தடுத்தார்கள். அதனால் அம்முனிவர் கோபித்து நீங்கள் வைகுண்டத்தை இழந்து பூவுலகுக்குச் செல்லக்கடவீர்கள் என்று சபித்தார். அப்போது திருமாலும் வந்து முனிவரது கோபத்தையாற்றி அவ்விருவருக்கும் சாபநிவாரணம் அருளிச்செய்யும்படிக் கேட்க அவர் நான் கூறிய சாபம்தவறாது. ஆயினும் இவர்கள் மித்திரர்களாயின் எழுசென்மமும் சத்துருக்களாயின் மூன்று சன்மமும் எடுத்துப்பின்பு வைகுந்தத்தை அடைவார்களென்று அருளிப்போனார். அவ்வாறே அவர் இருவரும் சத்துருக்களாயின் சீக்கிரம் மீளலாமென்றெண்ணிப் பகவானுக்குச் சத்துருக்களாய் முதலில் இரணியகசிபு இரணியாட்சனாகவும் பின்பு இராவணன் கும்பகர்ணனாகவும் பின்பு கம்சன் சிசுபாலனாகவும் பிறந்து ஸ்ரீ பகவானால் உயிரிழந்து சாபவிமோசனமும் பெற்றார்கள் என்று கூறினார். சிசுபாலன் இறந்தபின்பு ஸ்ரீ கண்ணபிரான் அநுமதியால் தருமநந்தனர் அரசர்க்குப்பூசைகள் புரிந்து எல்லோரையும் அவரவரிடங்களுக்கு விடைகொடுத்தனுப்பினார். அரசர்கள் யாவரும் செல்ல ஸ்ரீகண்ணபிரானும் விடைபெற்று துவாரகாபுரியை அடைந்தார்.

### 3 துரியோதனன் தருமபுத்திரரைச் சூதில் வென்றது.

இராஜசூயபாகம் கண்டுமீண்ட துரியோதனன் ஒருநாள் பீஷ்மதுரோணாதி பெரியோர்

களும், கர்ணன் சகுனிமுதலான மந்திரிமார்களும் துச்சாசனன் முதலான தம்பிமார்களும் புடைசூழச் சபாமண்டபத்தில் வீற்றிருந்தபோது, கர்ணன் வாலைக்கிளப்பி முள்ளை வைப்பதுபோலச் சபையாரை நோக்கி "ஆ! ஆ! தருமபுத்திரன்பெற்ற மேன்மையும் புகழும் யாவர் பெற்றார்கள்? அவனைப்போல இராஜசூயயாகம் செய்தவர் யாவர் உலகில்"? என்றான். அதுகேட்டுச்சகுனி, "ஆமாம் சிங்கம் வெளிவராததுடங்குமாயின் யானையடித்த மூப்புத்தானே" என்றனன். இவ்வாறு இவர்கள் சொல்லிய வார்த்தைகளைக்கேட்டுத் துரியோதனன் பொறாமைகொண்டு "இனி நாம் பாண்டவர்களைப் பலத்தாலாவது வஞ்சனையாலாவது வெல்லாவிடில் அவர் நமது நாடுநகரங்களையும் கவர்ந்து யாவும் தம் மரசாட்சிக்குட் படுத்திக்கொள்ளல் நிச்சயம்" என்றனன். துச்சாசனன் அதுகேட்டு "இதுதான்சமயம் கள்ளக்கிருஷ்ணன் இல்லாதவேளையில் வென்றால்தான் வெல்லலாம். பாண்டவர்களை; ஆதலின் இப்போதே போர்க்குப் புறப்படுக" என்றான். அப்போது சகுனி, "ஏன் வீண்வாதம் கூறுகிறீர்கள்? பாண்டவர்களை வஞ்சனையில் கொன்றாலன்றி பலத்தினாலே கொல்லலாம் என்கிறதை விட்டுவிடுங்கள்" என்றான். அப்போது துரியோதனன் மாமனை அருகணைத்து, ஆனால் வஞ்சனையால் கொல்வது எவ்வாறெனன, அதற்குச்சகுனி புதிதாக மண்டபம் ஒன்று கட்டுவித்து, அம்மண்டபத்தைப்பார்க்க அழைத்தல் போலப்பாண்டவர்களை அழைத்து மாயச்சூதாடச்செய்து நாடுநகரம் முதலான செல்வங்களைக்கவர்வதே காரியம் என்றான்.

அதுகேட்டுத் துரியோதனனும் அதுவே தக்கதென்று சகுனியைமெச்சி அவவாறே மண்டபமொன்று கட்டுவித்துப் பாண்டவர்களைக் கூட்டிவரும்படி விதுரனை அனுப்பினான். விதுரன் இந்திரப்பிரஸ்தத்தை அடைந்ததும் பாண்டவர்கள் எதிர்கொண்டழைத்துச்சென்று உபசரிக்க விதுரனும்தான் வந்த வரலாற்றைச் சொல்லித்திருதராட்டிரனாற் கொடுக்கப்பட்ட நிருபத்தையும் காட்டினான். அதுகண்டு தருமபுத்திரர் அவர்கள் கருதிய சர்ப்பனையை விதுரனாலறிந்தும் தந்தையின் கட்டளையை மீறக்கூடாதென்று நினைத்து அவ்வாறே தம்பிமாரோடும் துரோபதையோடும் பரிவாரங்களோடும் புறப்பட்டு அத்தினபுரத்தையடைந்து பீஷ்மன் திருதராட்டிரன் முதலானோரைக்கண்டு வணங்கி விதுரன் மாளிகையில் தங்கியிருந்தார்.

மறுநாள் துரியோதனன் சகுனி முதலானோரோடு ஆலோசனைசெய்து தருமபுத்திரரை மண்டபம்காண அழைத்துவரும்படித் தூதனை அனுப்பத் தருமபுத்திரரும் தம்பிமார்களோடு அங்குளமூந்தருளி அம்மண்டபத்தின் வளங்களைக்கண்டு வியந்து புகழ்ந்தார். அப்போது சகுனி வந்து தருமரை நோக்கிப் போது போக்காகச்சிறிதுநேரம் சூதாடுவோம் வருக என்னத்தருமபுத்திரர் அதற்குடன்படாமல் தப்பிக்கொள்ள முயன்றும்பின்னர் விளையாட்டாகச்செய்யும் சூதுபோர்க்கு அஞ்சும் நீயோ இரணகளத்தில் எதிர்த்து யுத்தஞ்செய்யத் துணிபவன் என்று அவருக்குரோசம் உண்டாகும்படியான சிலவார்த்தைகளைக் கர்ணன் முதலானோர் சொல்லலால் கடைசியில் விதிவலியினால் அச்சூதாட்டத்துக்குச் சம்மதித்து ஆடத்தொடங்கினார். அவ்வாறு ஆடுகையில் சகுனியின் வஞ்சனையாலே தர்மபுத்திரர்தாம் பந்தயமாக வைத்த அணிகள், பரிகள், கரிகள், நாடுகள், நகர்கள் முதலான சகலமான செல்வங்களையும் இழந்ததேயன்றித் தம்மையும் தம்பிமார்களையும் மைந்தரையும் தோற்றுப்பின்பு திரௌபதியையும் தோற்றார். அதன்பின் துரியோதனன் தன்னை அன்று இராசசூயத்துக்குச்சென்ற காலையில் பரிகசித்த திரௌபதியை இன்று மானபங்கப்படுத்துவேன் என்று கூறித்துச்சாசனனை விட்டு அவளை அழைத்துவரச்சொல்ல, அவனும் திரௌபதியைக் கூந்தலைப்பிடித்திழுத்து அவள் அழுது கோவென்றலறஅலறச் சபையில் கொண்டுவந்து நிறுத்தினான். சபையில் இருந்தார் பலரும் துரியோதனனுக்குப்பயந்து வாய்திறவாமல் மௌனமாயிருந்தார்கள். பாண்டவர்களில் இளையவர் நால்வரும் மூத்தவராகிய தரும புத்திரருக்குப் பயந்து அடங்கியிருந்தார்கள். அப்போது திரௌபதி சபையோரை நோக்கி, "என்னைத் தரும நந்தனர் தோற்றது தம்மைத் தோற்றபின்னோ தோற்கும் முன்னோ? பின்னையின் நான் அடிமையாகக் கடனில்லையே

இந்த நியாயத்தைச் சொல்லவேண்டுமென்றனள். அதற்கு ஒருவரும் மறுமொழி சொல்லாமல் வாய்மூடி யிருக்க அப்போது துரியோதனன் தம்பியாகிய விகர்ணன் என்பவன் சத்தியத்தில் தவறாதவன் ஆதலின் சபையோரை நோக்கி திரௌபதி கூறியது நியாயமே அவள் அடிமையாதல் இல்லை இது யாவரும் ஒப்பத்தக்கதே யென்று தைரியமாகக் கூறினான். ஆயினும் அவன் வார்த்தையைத் துரியோதனன் பொருள் பண்ணாமல் இகழ்ந்து திரௌபதியைச் சபையில் அரசர்கள் முன்னே துகில் உரியும்படித் துச்சாசனனுக்குக் கட்டளையிட அப்போதும் சபையோர்கள் சும்மா விருந்தார்கள். நல்ல வேளையாய்த் துரோபதையின் பதிவிரதா பத்தியமகிமையாலும் அவளது பகவத் பத்தியினாலும் ஸ்ரீ பகவான் வாசுதேவனுடைய கிருபையினாலும் வஸ்திரம் உரிய உரியவளர்ந்துகொண்டே வந்து அவள் மானத்தைக்காத்ததினால் துரியோதனன் நினைத்த கொடுஞ்செயல் நிறைவேறாமற் போயிற்று. பின்பு திரௌபதியைத் துரியோதனன் தன் தொடைமீதிருத்தக் கட்டளையிடத் திரௌபதி அத்தொடை வழியே அவனுக்கு உயிர் நீங்கி மாளவும் வேறு கொடுமையான பல சாபங்களையும் இட்டாள். வீமன் முதலிய பாண்டவர்களும் கொடிய பிரதிக்கினைகளைச் செய்தார்கள். அப்போது பூகம்பம் முதலான அநேக கொடிய உற்பாதங்கள் தோன்றத் திருதராட்டிரன் அச்சங்கொண்டு திரௌபதிக்கு நல்லவார்த்தைகளைச் சொல்லித் தன் மக்கள் செய்த அக்கிரமங்களைப் பொறுத்தருளும்படி வேண்டிக்கொண்டு தருமன் முதலானோரையும் சாந்தப்படுத்தி அவர்கள் இழந்த பொருள்கள் எல்லாவற்றையும் மீளவும் பெற்றுக்கொண்டு தம்மூருக்குப் போகும்படிச் சொன்னான். ஆயினும் கிழவன் வார்த்தையை யாவர் கேட்கிறார்கள்? துரியோதனன் அதற்கொப்பாமல் அவர்கள் காடு சென்று வாழ்தீலை வேண்டுமென்றனன். அதனால் திருதராட்டிரன் மீண்டும் பேச்சுமாறித் தன் மகன் கருத்துக்கிணங்கப் பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசமும் கழித்துப் பின்பு தம முரிமையைப் பெற்றுக்கொள்வதென்றும் சொன்னான். பாண்டவர்களும் சம்மதித்தார்கள். அப்போது திரௌபதி சபையோரை நோக்கித் தன் கணவரையும் புத்திரர்களையும் திருப்பிக்கொள்ள இன்னொரு தரமும் சூதாட வேண்டுமென்ன, அதற்குத் துரியோதனனும் சம்மதித்தான். தருமபுத்திரர் தாம் செய்த புண்ணியங்களையே பந்தயமாக வைத்துத் திருமால் திருநாமங்களையுச் சரித்துத்தியான பூர்வமாக ஆட ஸ்ரீ வாசுதேவன் கிருபையினால் சகுனியின் தந்திரம் பலியாமல் ஆட்டம் செயித்துத் தம்மையும் தமபியரையும் புத்திரர்களையும் மீட்டுக்கொண்டு மனைவியோடும் அப்பதியை விட்டு வனத்துக்குச் சென்றார்.

சபாபருவம் முற்றும்.

---

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(அதிகாரம்—4.)

மகாதேவய்யர் இறந்தபிறகு குடும்பத்தை கவனித்துப் பார்க்கும் பொறுப்பு காமேசுவரய்யருக்கு ஏற்பட்டது. காமேசுவரய்யருக்கு இந்த விஷயமே தெரியாமலிருந்தும், மகாதேவய்யர் பணம்முழுந்து மனவியாதியால் அவஸ்தைப்பட்ட நாள் முதல், இவர் குடும்பத்தைப் பார்க்கவேண்டி நேரிட்ட படியால் குடும்ப காரியங்களை யெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் தெரிந்து கொண்டார். இதனால் அவருடைய வைதீக காரியங்களுக் கெல்லாம் குறைவு ஏற்பட்டது. முதலில் கூடியமட்டும் இரண்டையும் பார்த்து வந்தார். பிறகு காவேரி ஸ்நானம் விடியற்காலம் செய்ய சரிப்படவில்லை யென்று விடிந்தபிறகு போக ஆரம்பித்தார். கொஞ்ச நாளைக்கெல்லாம் காவேரி ஸ்நானமே செய்ய சரிப்படவில்லை யென்று விட்டுவிட்டார். பிறகு கொஞ்ச காலத்துக்கெல்லாம் அதிக பாராயணங்கள் வைத்துக்கொண்டு முடியவில்லை யென்று பாராயணங்களை விட்டார். பிறகு சிவபூஜை சரிப்படவில்லை யென்று நிறுத்தினார். பிறகு கொஞ்ச காலத்திற் கெல்லாம் தேவ பூஜைகூட செய்ய சரிப்படவில்லை யென்றும் ஆனால் அதை விடமுடியாததால், பூஜை செய்யஓர் பிராமணனை சம்பளத்துக்கு

திட்டம் செய்தார். சேஷய்யரோவெனில் தனக்கு பெண்பிறந்தது முதல் ஜானகியம்மாள் மீது வெகு பிரியம்வைக்க ஆரம்பித்து தான் அடிக்கடி பந்தலூர் கிராமத்தில் நிலங்களைப் பார்க்கவேண்டி யிருந்ததால், பெண்சாதியோடு அங்கேயே இருக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஓர் மச்சுவீடு கட்ட ஆரம்பித்தார். சேஷய்யர் பெண்ணுக்கு இப்போது வயது இரண்டு இருக்கலாம். அப்பெண்ணின்மீது சேஷய்யருக்கு அதிக பிரியம் இருக்க கேழ்க்கவும் வேண்டுமோ. மகாதேவய்யர் இருந்த காலத்தில் அவர் சேஷய்யரைவிட இன்னும் அதிகமாக இப்பெண்ணின்மீது பிரியமாய் இருந்தார். அப்பெண்ணுக்குத் தான் திருச்சினப்பள்ளிக்குப் போயிருந்தபோதெல்லாம் பாவாடை அல்லது மேலாக்கு, ஊது பொம்மை எதாவது வாங்கிவாராமலிருக்கமாட்டார். எப்போதும் அப்பெண்ணை மகாதேவய்யர் கீழேவிடமாட்டார். காமேசுவரய்யரும் அப்பெண்ணின்மீது வெகுபிரியம் வைத்திருந்தார். அந்த வீட்டிற்கே அருமைப் பெண்ணாதலால் எல்லோரும் அதை வெகு பிரியமாய் வைத்திருந்தார்கள். சேஷய்யர் வீட்டிற்கென்று இரண்டாயிரம ரூ-ாய் நாட்டுக்கோட்டை செட்டியிடம் கடன் வாங்கினார். காமேசுவரய்யர் வேண்டாமென்று சொல்லியும் கேழ்க்கவில்லை. கடைசியில் காமேசுவரய்யரும் அவரிஷ்டப்படி விட்டுவிட்டார். சேஷய்யர் வீடு வெகு சிறப்பாய்க் கட்டினார். மகாதேவய்யர் இறந்து ஐந்து மாசத்திற்கெல்லாம் அவருடைய மனைவிக்கு பத்து மாசமாகவும் காமேசுவரய்யர் அது எப்படியாவது பிள்ளைக் குழந்தையாகப் பிறக்க வேண்டுமே என்கிற கவலையோடு வெகு விஜாரப் பட்டுக்கொண்டிருந்தார். பார்வதியம்மாளுடைய தாயார் சீதம்மாள் துணைக்காக இங்கேயே இருந்தாள். கொஞ்ச நாளைக்கெல்லாம் எல்லோருடைய மனதையும் களிக்கச்செய்ய பார்வதியம்மாளுக்கு ஓர் பிள்ளைக்குழந்தை பிறந்தது. காமேசுவரய்யருக்கு இதைக்கேழ்க்க சந்தோஷம் அதிகமாயிருந்தபோதிலும் தன் தம்பி இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருத்தப் பட்டுக்கொண்டு பார்வதியம்மாளை ஜாக்கிரதையாய் பார்த்துக்கொள்ளும்படிக்கும் அந்தக் குழந்தையாவது க்ஷேமமாய் இருக்கவேண்டுமே என்றும் விஜாரப்பட்டுக்கொண்டிருந்தார். வீட்டில் ஒவ்வொருவருக்கும் அன்றையதினம் சந்தோஷம் ஒருபக்கமும் மகாதேவய்யரை நினைத்து வருத்தம் ஒரு பக்கமுமாயிருந்தது. சேஷய்யருக்கும் பந்தலூருக்கு இந்த சமாச்சாரம் போய்ச்சேர அவரும் கேட்டு சந்தோஷம் அடைந்ததுடன் தன் தமையன் இருந்தல்லவா சந்தோஷத்தை அனுபவிக்கவேண்டுமென்று நினைத்து வருத்தப்பட்டார். காமேசுவரய்யர் வீட்டில் குழந்தை பிறந்ததில் சந்தோஷப்படாதவள் ஜானகியம்மாள் ஒருவளே. இவளுக்கு எங்கே தன் மகளுக்கு சொத்து ஒன்றும் இல்லாமல் போய்விடுமோ என்ற பயத்தாலோ அல்லது எந்த காரணத்தாலோ அந்தக் குழந்தை பிறந்த முதல் இவள் சந்தோஷ முகமாக காணப்படவில்லை. காமேசுவரய்யர் குடும்பத்தில் நாம் எல்லோரையும்பற்றிச் சொன்னோம். ஆனால் காமாக்ஷியென்று அவர் வீட்டிலிருக்கும் ஓர் விதவையைப்பற்றி நமக்குச்சொல்ல இதுவரையில் சமயம் நேரிடவில்லை. இப்போது நேரிடுகிற படியால் அவளைப்பற்றி கொஞ்சம் சொல்வோம்.

காமாக்ஷியம்மாள் சேஷய்யருக்கு தங்கை. சேஷய்யருக்கு மூன்றுவயது சின்னவளாயிருந்தபோதிலும் சிறு வயதில் சேஷய்யருடனே விளையாடிக்கொண்டிருந்தபடியால் சேஷய்யரிடம் இவள் அதிகப் பிரியமாயிருந்து வந்தாள். இவள் சிறுவயதிலேயே அதிபால்யத்தில் கலியாணம் செய்யப்பட்டு விவரம் தெரிவதற்குள்ளேயே அறுத்துப்போய்விட்டாள் ஆஹா! சிறுபெண்களை அதிபால்யத்தில் விவரம் தெரிவதற்குள் கலியாணம் செய்துகொடுக்கும் பயனைப் பாருங்கள். அவர்கள் விவரம் தெரிவதற்கு முன்னேயே விதவையாய்ப் போகிறார்களே. இப்படிப் பட்டவர்களுடைய கெதி ஆயுள் முழுவதும் கஷ்டப்படவேண்டியதுதானே? அவர்களுக்கு இரண்டாம் கலியாணம் செய்யவோ சம்மதிக்க மாட்டேனென்கிறார்கள். கலியாணத்தையாவது அப்பெண்கள் கலியாணமானவுடனே புருஷனுடன் சுகப்படக்கூடிய வயதில் கலியாணம் செய்யவாவது சம்மதிக்கிறார்களா! அதுவும் இல்லை. இப்படி இரண்டு விதத்திலும் பெண்களுக்கு கலியாணம் செய்யவிடாமல் இரண்டும் கெட்டான் வயதில் கலியாணம் செய்வது புலியின் கொடுமையைக்காட்டிலும் அதிகமான கொடுமையல்லவா. இப்படி செய்வதினாலல்லவோ பால்யவிதவைகள் பெருத்துப்போகிறார்கள். அதிலும் எத்தனை பெயர்கள் பார்ப்பதற்கு பதிவிரதைகள்போல் இருந்துகொண்டு சோரபுருஷன் இவ்வளவுதான் என்று கணக்கிடக் கூடாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் நமது சாஸ்திரிகளும் ரகசியமாக விப்சாரித்தனம் செய்கிறவர்களைத்தான் பந்திபோஜனம் செய்ய யோக்யமுள்ளவர்கள் என்கிறார்கள். இரகசியமாய் பல நாயகன்களை வைத்துக்கொள்ளாமல் இக்காலம்போல் ஓர் பால்ய விதவை தலைமயிரை எடுக்காமலாவது அல்லது எடுத்த மயிரை அதாவது மொட்டை அடித்துக்கொண்ட பிறகு மறுபடி மயிரை வளர்த்துக்கொண்டாவது நாணயமாக ஒருவனையே நம்பி அவனையே புருஷனாகக் கிரகித்திருந்தால் அவள் வீட்டில் நமது சாஸ்திரிகள் ஜலபானம் பண்ணக்கூடாது என்கிறார்கள். ஆகையால் வாசல் வழியே கள்ளுக்கடையில் நுழைந்து கள் குடிப்பவன் நமது சாஸ்திரிகளுக்குப் பரம சண்டாளன். புறக்கடை வழியாய் ரகசியமாய் கள்ளுக்கடைக்குப்போய் குடித்துவிட்டு விபூதியும் ருத்திராக்ஷமும் வெளிக்குப் பகட்டாக ஒருவன் போட்டுக்கொண்டு வந்தால் அவன் கருமேகவியாதியை மறைப்பதற்கு அப்படி விபூதி போட்டிருக்கிறான் என்பதை மறந்து

அவனை பெரிய சாஸ்திரிகளென்று கொண்டாடி அவன் பாத தீர்த்தங்கூட வாங்கி நமது சாஸ்திரிகள் சாப்பிடுகிறார்கீள். ஆகையால் இக்கொடிய வேஷகாலத்தில் இந்த வேஷங்களை எல்லாம் கூடிய மட்டில் குறைக்கக் கூடியதான வழியாகிய பெண்களுக்கு வயது வந்தபிறகுதான் கலியாணம் செய்ய வேண்டியது என்கிற வழக்கத்தை நமது காமேசுவரய்யர் குடும்பத்தில் அனுஷ்டிக்காததால் காமாக்ஷியம்மாள் சிறுவயதில் விதவையாகவும் அவளை சாகிறவரையில் தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டு அவளை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளவும் அவள் விஷயமாய் விஜாரப்படவும் காமேசுவரய்யருக்கு எற்பட்டிருந்தது. காமாக்ஷியம்மாளை சிறுவயதிலேயே தெய்வம் அப்படி இளப்பம் செய்திருந்தும், அவளுக்குத் தன் தோஷம் தெரியவில்லை. ஜானகியம்மாளோடு சிறுவயது முதல் பழகிவந்தபடியால் ஜானகியம்மாள் போலவே இவளும் பார்வதியம்மாளை இகழ்ச்சியாய் நடத்தி வந்தாள்.

மகாதேவய்யர் இவளிடம் விசுவாசமாய் இருந்தபோதிலும் இவள் சேஷய்யர் மீதுதான் வெகு பிரியமாயிருந்தாள். அது போலவே பார்வதியம்மாள் என்ன பிரியமாயிருந்தபோதிலும் இவளுடைய பிரியம் ஜானகியம்மாள் பேரிலிருந்தது. இவளுக்கு புக்ககத்தில் ஜீவனாம்சத்துக்குக் கூட வழியில்லாமற்போக அவளுக்கென்று ஐந்நூறு ரூபாய் ஓர் முதலாய் மகாதேவய்யர் எற்படுத்தி வைத்தார். அப்படியெல்லாம் உபகாரம் செய்த மகாதேவய்யர் குமாரனிடம் கூடப் பிரியம் இல்லாமல் ஜானகியம்மாள் பெண்ணின்மீது அதிக பிரியமாயிருந்தாள். ஜானகியம்மாள் பெண்ணின்பேர் தங்கம். மகாதேவய்யர் பிள்ளையின்பெயர் இராமச்சந்திரன். இந்தக்குழந்தை பிறந்ததற்கு மனுஷ்யாள் ஆதரவுள்ள வீடாயிருந்தால் குழந்தையின் க்ஷேமத்தைக்கருதி குழந்தையின் தாய்க்கு நல்ல போஜனம் முதலிய சுகம் கிடைக்கும். ஆனால் இந்த வீட்டில் காமாக்ஷியம்மாள் கீழ் தேசங்களில் அதிகமாக விளங்கிவரும் அறுத்தநாத்தி அதிகாரம் என்னும் அதிகாரத்தை வகித்து வந்த படியாலும் ஜானகியம்மாளுக்கு இந்தக் குழந்தை பிறந்ததற்காக அதன் தாய்க்கு அதிக உபசாரம் செய்ய இஷ்டமில்லையாதலாலும் அக்குழந்தையின் தாயான பார்வதியம்மாளுக்கு வேளாவேளையில் சாப்பாடுகூட செவ்வையாகப் போடமாட்டார்கள். பார்வதியம்மாள் தாய் எதாவது பிரஸவித்த பெண்ணை சுகமாக வைத்துக்கொள்ளாமல் இப்படி கவனியாமல் இருக்கலாமா என்று கேட்டால் அதற்கு காமாக்ஷியம்மாள் நாங்கள் என்ன சுகத்தைக் கண்டோம். சுகமெல்லாம் வைதீகன் வீட்டில் பிறந்தால்தானே தெரியும் என்பார்கள். பார்வதியம்மாள் தாயார் எதாவது ஒரு பதார்த்தத்தை எடுத்து பெண்ணுக்குக் கொடுத்தால் ஜானகியம்மாளும் பார்வதியம்மாளும் ஒன்றுசேர்ந்து வீட்டில் பத்து பதார்த்தங்களைக் காணோம் என்பார்கள். சில சமயங்களில் வீணில் அரிசியைக்காணோம் பருப்பைக் காணோமென்று ஜாடையாய் பார்வதியம்மாள் தாயார் சீதம்மாள்பேரில் குற்றம் சாட்டுவார்கள். சில சமயங்களில் காமாக்ஷியம்மாள் காமேசுவரய்யரிடம் இவைகளையெல்லாம் சொல்ல அவரும் இது பெண்டுகள் சமாச்சாரமென்பது தெரியாமல் சீதம்மாளோடு சண்டைபோடுவார். இதுகளையெல்லாம் கண்ட பார்வதியம்மாள் தாயார் சீதம்மாளுக்கு இங்கே இருக்கவே மனம் வரவில்லை. ஆனால் பெண்ணுககாக அத்தனை கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு வந்தாள். கடைசியில் பொறுக்கக்கூடவில்லை. எப்படியென்றால் ஒரு நாள் காலையில் பூவரசநல்லூர் காவேரியில் சில பெண்கள் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஓர் பெண்ணுக்கு கண் இருக்கிற இடம்கூட தெரியவில்லை. ஆனால் அவளுக்கு விசாலாக்ஷியென்று பெயர். இவள் வம்பில் வெகு கெட்டிக்காரி. இவள் புடவை தோய்த்துக் கொண்டிருக்கும்போதே காமாக்ஷியம்மாள் தோளில் புடவைகளைப் போட்டுக்கொண்டு வந்து விசாலாக்ஷியை கல்லை விடென்றாள். விசாலாக்ஷி எது அவசரமாக இருக்கிறது. பிள்ளை பெற்றவளுக்கு பத்தியம்போடவேண்டுமோ என்றாள். காமாக்ஷியம்மாள் சூள் கொட்டிக்கொண்டு "ஆமாம் நான் தான் எல்லாம் தாங்குகிறேன்! தாங்கினாலும் தாங்கினாள் என்று சொல்வாளோ'ன்னோ!" என்றாள். அதற்கு திக்குவாய் வேம்பு என்ற ஒருவள் பின்னே நீ தா-தா-தா-தாங்காமல் வேறு யார் தா-தா-தாங்கப் போரா என்றாள். காமாக்ஷியம்மாள் என்னடி வேம்பு தா-தா என்று ஸதிரு ஆடுகிறே! நான்பணம் போடமாட்டேன். தாங்க'றத்துக்கெல்லாம் மனுஷாள் இருகாளோன்னோடி! நாமயாருக்கடிலக்ஷியம்! என்றாள்.

விசாலக்ஷி:—'காமாக்ஷி எது புடவைபாலமாயிருக்கிறது பார்வதி புடவைகூட இருக்கிறதோ' என்றாள். காமாக்ஷியம்மாள்.—நன்னாருக்கு அவாளுகு பயித்தியம்பிடித்திரிக்கோ என்னிடம் கொடுக்க என்றாள். வேம்பு.—காமாக்ஷிபே-பே-பேசவாண்டாம்னாலும் கேக்கலே. சா-சா-சதிர் ஆடுறேன் எங்கறே. புடவையை உன்னிடம் கொடுக்காதே யாரிடம் கொடுக்கிறது என்றாள். காமாக்ஷி.—வேம்பு கோபித்துக் கொள்ளாதேயம்மா. சா-சா-என்று என்னை சாகச்சொல்லுகிறாயா அவாளுக்கெல்லாம் மனுஷருக்கு என்னடி குறைவு என்னையும் ஜானகியையும் போலவா என்றாள். விசாலாக்ஷி, என்ன மனுஷியாளிருந்து என்னசெய்கிறது. நெய் மோர்முதல் நீங்கள் ஒளித்துவைத்து விட்டால் அவள் என்ன செய்வாள் என்றாள்.

காமாக்ஷியம்மாள்: ஐய்யோ, ஐய்யோ, இது வேறே பழியா நாங்கள் நெய்யை ஒளித்து வைப்பானேன் நெய்தான் ரகசியமா ஒளித்துவைத்து தாயார் பெண்ணுக்கு குத்துகிறாளே அவர்களுக்கு நெய்க்கு என்ன குறைச்சல் நல்லசம்பா அருசி தினம் எடச்சிவீட்

டுக்குப் போகிறது நல்ல நெய்க்கு கேழ்ப்பானேன். எங்களுக்குக்கூட அப்படிப்பட்ட நெய் அகப்படுகிறதில்லையே என்றாள்.

வேம்ப: ஆனால் அரிசி விற்கிறாளா என்றாள். விசாலக்ஷி: எல்லாம் இருக்கும் நீங்கள் சாமான்களை ஒளித்துவைத்தால் பின்னே அவர்கள் என்னசெய்வார்கள்.

காமாக்ஷி: ஆணையிருக்கு, ஆணைவிட்டேன். அப்படி சாமான்களை நாங்கள் ஒளித்து வைத்திருந்தால்—வீணில் எங்கள் தாலையை தின்கவேணும் என்று தின்கிறாள். வைதீககுறும்பு.

வேம்பு: து-து-து என்று மேலே சொல்லத்தொடங்கினாள். அதற்குள் காமாக்ஷியம்மாள் என்னடி வேம்பு தூலுக்கணைட்டமா துப்பிவிடுவேபோலேயிருக்கு. உன்னோடு பேசிக்கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. நீ பேசுவதெல்லாம் பல்லவி சங்கதியோடே பேசறே. எனக்கு அதுக்கெல்லாம் சாவகாசமில்லையென்று போய்விட்டாள். இவள் போன சற்று நேரத்திற்கெல்லாம் பார்வதியம்மாள் தாயார் சீதம்மாள் வந்தாள். விசாலக்ஷி சும்மாயிராமல் என்ன பாட்டி குடமெல்லாம் அரிசியாயிருக்கு என்றாள்.

சீதம்மாள்: நன்றாயிருக்கம்மா. நீ வேறே பழிபோடுகிறயா. அப்படிப் போய் காமாக்ஷியிடம் சொல்லும் அவள் நிஜம்தான் என்று நினைத்துக்கொள்வாள் என்றாள்.

வேம்பு: நீ-நக்கி-நக்கி-நக்கிறதென்ன! இப்போதான் சொல்லிவிட்டுப்போறாளென்றாள்.

சீதம்மாள்: இதன் தாத்பரியத்தைத் தெரிந்துகொண்டு ஆனால் அதுவும் சொல்லியாச்சா, என்ன செய்கிறது எனக்கு தெரியில்லை. இவாள்வீட்டில் அரிசி திருடியாவது வித்து ஊருக்குப் பணம் சம்பாதித்துக்கொண்டு போகலாம் என்று வந்தேனென்றாள்.

விசாலாக்ஷி:—காமாக்ஷியென்னசெய்வாள். நீங்கள் ஒரு காரியத்தையும் அவளிடம் நம்பிக்கொடுக்கிறதில்லையாம். பார்வதி புடவைகூட தோய்க்க கொடுக்கிறதில்லையாமே என்றாள்.

சீதம்மாள்:—ஐயோடி இது வேறே சொல்லிக்கொண்டாளா. ஜானகி புடவையை எடுத்துத்தோளில் போட்டுக்கொண்டு வந்தாளே பார்வதி புடவையும் பக்கத்தில்தானே போட்டிருந்தேன் எங்கே எடுத்துக்கொண்டுவறது தானே இவள் அதை எடுப்பதற்குள் நான் இரண்டு கைகளையும் எடுக்கக் கூடாதென்று பிடித்துக்கொண்டுவிட்டேனா. என்னமோ சுவாமிமட்டும் நல்ல மனதுவைத்து அந்தக்குழந்தையை தீர்க்காயுசாய் வைக்கவேண்டும். இந்த வீடுபோல் நான் எங்கேயும் இப்படி நெய் ஒளித்துவைப்பதையும் அரிசி ஒளித்துவைப்பதையும், இப்படிக் காணாத இடங்களில் தாஷிப்பதையும் நான் பார்த்ததேயில்லையென்று சொல்லி பிறகு ஸ்நானம் செய்துவிட்டு வீட்டிற்குப் போய்விட்டாள். விசாலாக்ஷி உடனே வெகு சந்தோஷப்பட்டுக்கொண்டு இதையெல்லாம் வீட்டுக்குப்போனவுடனே குடத்தைக்கீழே இறக்கினதும் ஈரப்புடவையுடனே காமாக்ஷியம்மாள் வீட்டிற்குப்போய் சீதம்மாள்பேரில் ஒன்றுக்குப் பத்தாய் சொல்லி ஓர் பறங்கிக்காய் இனாமாக வாங்கிக்கொண்டு போய்விட்டாள். உடனேயன்று காமாக்ஷியம்மாளுக்கும் சீதம்மாளுக்கும் ஓர் யுத்தம் நடந்தது. பார்வதியம்மாள் இந்தமானக்கேட்டைப் பார்த்து பொறுக்கக்கூடாமல் தன் தாயை அடக்கினாள். பிறகு கொஞ்சநாளைக்கெல்லாம் இவர்கள் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் சீதம்மாள் தன் ஊருக்குப் போய்விட்டாள். காமாக்ஷியம்மாள் ஏதாவது வாசலில் வந்தால் அதை உடனே தங்கத்துக்கு வாங்கவேண்டுமென்பாள்.

அதற்குப் பார்வதியம்மாள் ஒன்றும் சொல்லமாட்டாள். காமாக்ஷியம்மாள் உடனே காமேஸ்வரய்யரிடம் சொல்லி அதை வாங்கிவிடுவாள். ஆனால் மகாதேவய்யர் பிள்ளைக்கு ஏதாவது வாங்கவேண்டுமென்றால் காமாக்ஷியம்மாள் அதற்கு சிபார்சு பேசவேண்டிய வேலையை ஏற்றுக்கொள்ளமாட்டாள். அது பார்வதியம்மாள் தான் யாராவது வழியில் போகிறவனைக்கொண்டு காமேசுவரய்யருக்கு சொல்லும்படி செய்து ஏற்பாடு செய்யவேண்டும். அப்படி காமேசுவரய்யர் சம்மதித்து வாங்கினபோதிலும் ஜானகியம்மாள் அதுகூட பொறுக்கமுடியாமல் நமக்கு என்ன உண்டு இருக்கிறவரையில் சாப்பாடுதான் உண்டு; அதோ ஆளப்பிறந்திருக்கிறானே பிள்ளை அவனைப் பாருங்கள் சாமான்பேரில் சாமானாக குவிந்துபோகிறது, இந்தப் பெண்ணுக்கு என்ன கிடைக்கிறது. எல்லாத்துக்கும் அதிருஷ்டம் வேண்டாமா. நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்று சலித்துக்கொள்வாள். காமாக்ஷியம்மாளும் அவளுக்கு ஒத்தாசையாக அதுக்கென்ன செய்கிறது உனக்கு அதிர்ஷ்ட முண்டானால் அது பிள்ளையாய்ப் பிறந்திராதா என்பாள். இப்படி வீட்டில் எல்லோரும் ஒரு கக்ஷியாயும் பார்வதியம்மாள் ஒரு கக்ஷியாயும் இருந்துவந்தார்கள். காமேசுவரய்யரும் இதை அறியாமல் பலத்த கக்ஷியிலேயே தானும் சேர்ந்துகொண்டு குடும்பத்தை வஹித்து வந்தார். ஆகையால் இராமச்சந்திரன் அந்த வீட்டுக்கு செல்வக்குழந்தையாக இருந்தபோதிலும் ஆதரவுள்ள மனுஷியாளாக ஒருவருமில்லாமல் அவனுடைய தாயாருடைய பிரயத்தனத்தினாலும் போஷணையினாலு மட்டும் வளர்ந்துவந்தான்.

எஸ். இராமஸ்வாமிஜயர், பி. ஏ.

## T. R. H. THE PRINCE AND PRINCESS OF WALES IN INDIA.

"I hope, and indeed I am confident, that the same loving interest in this great continent which was inspried in my father's heart by his visit to India and which has never abated, will equally come to us. If, as we travel through the various countries which make up this great Empire, the Princess and I can win the sympathy and good-will of the peoples of India, we shall secure a precious result from the voyage which we have been priveleged to undertake."

"I have inherited from my father and from our late beloved Sovereign, your first Queen-Empress, a love for India and for Indians. From my youth, I have associated the name of India with qualities of kindness, loyalty, courtesy and bravery; and I doubt not that these early ideas will be confirmed and strengthened by the experiences which await me in the next few months."—*H. R. H. the Prince of Wales at Bombay, 9th November, 1905.*

## மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசர் இளவரசியின் விஜயம்.

நமது சக்கிரவர்த்தியாகி மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசருக்கும் அவருடைய பத்னியாருக்கும் பின் பட்டத்துக்குரியவராகிய மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரும் அவருடையபத்னியாரும் இந்த மீ 9உ பம்பாயில்வந்திறங்கி இப்பொழுது இந்தியாவின் பலபாகங்களையும் சுற்றிப்பார்த்துவர ராஜ கோலத்தோடு பிரயாணம்செய்து வருகிறார்கள். மார்ச்சுமீ 17உ இவர்கள் பிரயாணம் முடிவுக்குவரும். மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசர் தாமேசொல்லியபடி சரியாக ஒருநாள் குறைய 30-வருஷங்களுக்குமுன் அவருடையதகப்பனாரும் நமது சக்கிரவர்த்தியுமாகிய மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசர், வேல்ஸ் இளவரசாகவிருக்கையில் இந்தியாவுக்கு விஜயமாய்வந்து எல்லாருக்கும் காக்ஷியளித்து பிரஜைகளுடைய அன்பையும் ராஜ விசுவாசத்தையும் கவர்ந்துபோனார். இந்தியர்களுக்கு அவரிடத்துப் பிரீதியும் விசுவாசமுமுண்டானதன்றி அவருக்கும் இந்தியாவின்மீதும் இந்தியர்களிடத்திலும் பிரீதியும் விசுவாசமும் உண்டாயிற்று. அவர் வழியைப் பின்பற்றி அவருடைய குமாரரும் அவருக்குப் பின் பட்டத்துக்குரியவருமான மேன்மைதங்கிய ப்ரின்ஸ் ஜியார்ஜ் என்னும் வேல்ஸ் இளவரசர் இப்பொழுது இந்தியாவுக்கு விஜயமாகவந்திருக்கிறார். இம்முறை இவர் தமது இராஜபத்நியோடும் வந்திருப்பது மிக விசேஷம். இந்தியர்களுக்கு அன்னையொத்த விக்டோரியா சக்ரவர்த்தினியார் இந்தியாவுக்கு சக்கிரவர்த்தினியாக முடிசூட்டப்பெற்றபின், இப்பொழுது ஸிம்மாஸனாதிபதியாகவிருக்கும் எட்வர்ட் அரசர் இளவரசாகவிருக்கையில் வந்ததன்றி அவருடைய கனிஷ்டகுமாரர்களில் ஒருவராகிய கோனாட்பட்டவர்த்தனர் அவருடைய பத்னிசகிதம் இந்தியாவிலே சேனாதிபதியாக விருந்தபோதிலும், இராஜவம்சத்தில் இனிச்சக்கிரவர்த்தினியாக வரக்கூடிய மாதரசி தம் கணவரோடும் இந்தியாவுக்கு விஜயமாகவந்தது இதுதான் முதற்தடவை. இப்பொழுது நம்தேசத்தில் ராஜகோலமாகப் பவனிவரும் மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசருக்கும் அவருடைய ராஜபத்னிக்கும் 5 குழந்தைகள் (கடைசிக்குழந்தை இந்த வருஷத்தில் பிறந்தது) இருந்தும், இளவரசி, அவர்களை விட்டுப் பிரியமனமற்றவராயிருந்தும், நாளைக்கு தான் சக்கிரவர்த்தினியாக வரப்போகிற தேசத்தைத் தம் பர்த்தாவோடுகூட தாமும் பார்த்துவர வேண்டுமென்று தாயன்பிலும் மேலாகத் தமது ராஜ கடமையையெண்ணி இந்தியாவுக்கு இளவரசர்கூடவேவந்தது மிகவும் மெச்சத்தக்கது. ஸ்ரீ ராமர் தமது இராஜகடமையைச் செலுத்தவேண்டி சீதையைக் காட்டுக்கு அனுப்பினதுபோல், நமது இளவரசியும் தமது இராஜகடமையைச் செலுத்த வேண்டி தமது கைக்குழந்தையையும் தாயைவிட்டுப் பிரிய மனம்பொறாப்பாலகர்களையும் விட்டுப் பிரிந்து வந்திருக்கிறார். பேரந்தஸ்திலுள்ளவர்கள் பெருமையையும் அவர்கள் அனுபவிக்கும் ஆடம்பர அனுபவங்களையும், அவர்களது இராஜகோலங்களையும்மட்டுமே கண்டு அவர்கள் பதவியைக்கண்டு மெச்சுகிறவர்கள் சாதாரணமாக அப்பதவியில் அவர்களுக்குரித்தான கடமையைச் செலுத்த அவர்கள்படும் அவஸ்தைகளைக் கவனிப்பதில்லை. ஹிந்துமாதர்களில் எத்தனை பேர் தம் குழந்தைகளைவிட்டுப் பிரிந்து மனதேக்கமின்றி 6-மாசமேனும் தூரதேசம் போய்வரத்துணிவார்கள். இப்படி யெல்லாத் தாய்மார்களுக்குமுள்ள ஏக்கமும் தாயன்பும் கவலையும் அரசகுலத்துப் பெண்களுக்குமுண்டே அவர்கள் தம் உத்தமபதவியையுன்னி நம்மைக்கொண்டாடும் பிரஜைகளை நாமும் தாயன்பு கடந்தேனும் கண்டுகொண்டாடவேண்டுமென்று கடமையையே பெரிதாக நினைத்து நடப்பது அவர்கள் பெருந்தன்மையைக்காட்டுகிறது. மாக்ஷிமைதங்கிய விக்டோரியா சக்கிரவர்த்தினியாரைப்போலவே அவருடைய பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் இல்லறவொழுக்கம்பற்றி இல்வாழ்க்கையின் மேன்மையையனுசரித்து "இல்லறமல்லது நல்லறமல்ல" வென்று கொண்டுவாழும் உத்தமசிகாமணிகள். நமது சக்ரவர்த்தியும் அவர் பத்னியை

யும் போலவே, இப்பொழுது நம்மத்தியிலிருக்கும் வேல்ஸ் இளவரசர் இளவரசியும் இல்லறத்தில் மிகப் பிரியம் வைத்தவர்கள். ஆகையால் இளவரசியோடும் இளவரசர் நம்மைப் பார்க்கவந்தது அவர் தாமே பம்பாயில் வாய்விட்டுக் கூறியபடி உள்ளன்பு காரணமாகவன்றி வெறும்மனே உபசாரத்துக்கல்ல. மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசர் இந்தியாவுக்கு விஜயமாய் வந்து போனது முதல் இந்தியாவின் மீதும் இந்தியப்பிரஜைகள் மீதும் மாறாத பிரீதி விசுவாசம் வைத்துள்ளாரென்றும், அப்படியே தாமும் பால்யமுதல் இந்தியாவின் மீது வைத்த ஆசையால் இத்தேசத்தையும் ஜனங்களையும் பார்க்கவேண்டுமென்கிற ஆவல் தீர இப்பொழுது விஜயம் செய்ய நேரிட்டதென்றும், இந்தியர்கள், பக்தியிலும், ராஜவிசுவாசத்திலும், மேலானவர்களென்றும், உண்மைக்குணமும் உள்ளன்பு முடையவர்களென்றும் தான் கேட்டும் படித்து முணர்ந்ததை இப்பொழுது நேர் நேராகப் பார்த்து அனுபவ பூர்த்தியாக அறிந்துபோக வெண்ணி வந்திருக்கிறதாகவும், இந்த மூன்று நாலு மாசம் சுற்றுப்பிரயாணம் செய்வதில் எல்லாவிடங்களையும் பார்க்க முடியாவிட்டாலும், இந்தியாவையும் இந்தியர்களையும் நன்றாக அறிவதற்கு வேண்டிய அளவு பரிச்சயம் பெறப் பார்த்துவர உத்தேசித்திருக்கிறதாகவும், இந்த சுற்றுப்பிரயாணத்தினால் இந்திய ஜனப்பிரீதியையும் இந்தியர்களது மாறாத விசுவாசத்தையும் தாம் பெறக்கூடுமானால், பல்லாயிரம் மயில் கடந்து தாம் பத்னி சமேதராய் யாத்திரை செய்து வந்ததின் பலன் சித்தித்ததாகக் கருதுவரென்றும், இளவரசிக்கு இந்தியாவிலும் இந்தியர்களிடத்திலும் தன்னைப்போலவே அன்பும் ஆதரவு முண்டென்றும் அவர்களது உள்ளக்கருத்தை வெளியிட்டுப் பேசினர். இந்தியர்கள் ஹிமாசல முதல் கன்யாகுமரிவரையிலும் ஒரு மனதாய் இவர்கள் நல்வரவைக்கோறி நாளைக்குத் தங்களை யாளும் சக்ரவர்த்தியும் சக்ரவர்த்தினியுமாக வரப்போகிறவர்களைக் கண்குளிரக்கண்டும், காணக்கூடாதவர்கள் அவர்கள் பெருந்தன்மையையும் பிரீதி வசனங்களையும் கேட்டும் உளமகிழ்ந்து உள்ளன்போடு விசுவாசித்து அவர்கள்நீடூழி வாழ்ந்து ஜயம்பெற விளங்கத் தமது ஹிருதய பூர்வகமாக வாழத்துவார்கள், வாழ்த்திக்கொண்டிருக்கிறார்க ளென்பதற்சையமில்லை. இவர்கள் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குச் சென்று பின்னர் பர்மாவுக்குச் சென்று அங்கிருந்து ஜனவரி மீ 24௳ கப்பல் மார்க்கமாக வந்து சென்னையிலிறங்குவார்கள். இங்கு நாலு நாள் தங்கிப் பிறகு மைசூர் பெங்களூருக்குச் சென்று வடக்கே மறுபடியும் பிரயாணமாகப் போவார்கள். எட்வர்ட் இளவரசர் தென்னிந்தியாவுக்கு விஜயம் செய்தபொழுது மதுரை திருச்சினாப்பள்ளி முதலிய முக்கிய ஸ்தலங்களையும் விஜயம் செய்தார். இம்முறை காலம் போதாமையில் சென்னையைத் தவிர வெளி ஜில்லாக்களில் எதையும் பார்க்கும்படி யேற்பாடு செய்வது சாத்தியமாகவில்லை. ஆயினும் இவ்விராஜதானி ஜனங்கள் எல்லோரும் இவர் சென்னை வருவதையே தங்கள் தங்கள் ஊருக்கும் வந்ததாக நினைத்து ஹிருதய பூர்வகமாக இவர்களை வாழ்த்தி நல்வரவு கூறுவார்களென்பதற்குச் சந்தேகமில்லை.

---

ஸ்ரீவாணீ விலாஸினி:—இம்மாதாந்தப் பத்திரிகையின் ஸரஸ்வதி பூஜை சஞ்சிகை இரண்டத்தனை பக்கங்களும் விஷயங்களும் நிறைந்து பிரபஞ்ச விருக்ஷமாம் வடவாலின் கீழ் ஸரஸ்வதி தேவியும், ஸ்ரீ தேவியும் வீற்றிருக்க அடர்ந்து நிறைந்த பசுந்தழைகளினூடே சூரியன் செங்கதிர் விட்டெரிப்பது விளங்க, "குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு" இல்லை யென்ற கம்பர் வாக்கு க்கிசை, அவ்விருக்ஷத்தின் கிளை யொன்றில் பச்சை, சிகப்பு, நீலம், என்னும் மூன்று நிறங்களும் சேர்ந்த வர்ணத்தில் அப்பு தேயு வாயுவென்னும் மூன்று தத்துவங்களாலாயதென்று குறிக்கும் (மனக்) குரங்கு ஒன்று ஒரு கொம்பைப் பற்றிக்கொண்டு "ஸ்ரீ வாணீ விலாஸினி"க்கொடி பறக்க விளங்குகிறது. இதில் ஸ்ரீ ரவிவர்மாவாலெழுதப்பட்ட ஸரஸ்வதி. லக்ஷ்மிபடங்களும், மஹிஷாஸுரமர்த்தனி படமும் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. விஷயங்களும் மனக்குரங்கின் சேஷ்டைகளுக்குத் தக்கபடி, அக்குரங்கு எப்படித் தாவினாலும் அதை யேற்றுக்கொள்ளத் தக்க கொம்பு ஒன்று வசதியாக விருக்கும்படிப் பலவாறாக அமைக்கப்பட்டிருக்கிறது. அன்பு நிறைந்து அகநெகவுருகும் பக்தர் முதல், கொலை களவு காமவிகாரங்களில் பிரியமுள்ள பாமரர் ஈறாக ஒவ்வொருவரும் தத்தம் சுபாவத்துக் கேற்றபடி விரும்பத் தக்க விஷயங்கள் நிறைந்திருக்கின்றன. ஸ்ரீ சங்கராசாரியார் சரித்திரத்தொடர்ச்சி மிகவும் ரஸமாகவிருக்கிறது. அவருடைய சரித்திரத்திலிருந்து நம்மவர்கள் அறிந்துகொள்ள வேண்டியது நிரம்பவிருக்கிறது. உளவறிந்து உண்மையுணர்வார் தான் அருமையாகவிருக்கிறது!

---

# "MERRY WIVES" OF MODERN IND.

[AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

# கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

## இந்நாடகத்தின்வேஷதாரிகள்

ராயபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி, பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.

காமசந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்.

கேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன், உக்ரசேனன், } இரண்டு சிநேகிதர்கள்.

வாசலன்...வீரசேனனுடைய மகன்

ப்ரதாபன்...கேசவதத்தனுடைய சிநேகிதன். பள்ளிக்கூடத்து வாத்[தியார்.

பராக்ரமன்...வைத்தியர்.

சருணன்...ஓர் பெரிய ஹோட்டல்காரன்.

கருப்பன், மூர்த்தன், } உக்ரசேனன் ஆள்கள்.

மார்த்தாண்டன், முனியன், வெறியன், வக்ரன், } பீமவர்மனுடைய ஆள்கள்.

சலிலன்...கேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பராக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசந்திரன் பேரில் காதல்கொ[ண்டவள்.

பத்மினி...பராக்ரமன் சமையற்காரி.

## 5-வது அங்கம்

### காக்ஷி. 2.

தெருவு.

வீரசேனன், விக்ரமவீரன், கேசவதத்தன் வருகிறார்கள்.

**வீரசேனன்** :—நாமெல்லோரும் ஆல மரத்துக்கு கொஞ்சம் தூரத்தில் குழியில் ஒண்டியிருப்போம். கேசவதத்தன் வெளிச்சத்தைக்கண்டஉடனே சற்று நேரத்திற்கெல்லாம் என் பெண்ணை வெள்ளை உடுப்போடு கண்டு, கூட்டிக்கொண்டு போகட்டும்.

**கேசவதத்தன்** :—நான் அவளோடு பேசி நாங்கள் அடையாளங்களும் ஏற்படுத்திக்கொண்டு விட்டோமே. பத்மினிகூட பக்கத்தில் இருந்தாள் கேட்டுப் பாருங்கள். அவளிடம் போமே என்று சொன்னவுடனே அவள் போ என்று சொல்வாள். அதனால் ஒருவருக்கொருவர் நன்றாய் தெரியும்.

**விக்ரமவீரன்** :—நல்லதுதான் உன்னுடைய சங்கேதங்களுக்கு அவசியம் ஒன்றுமில்லை. இதோ 10, மணி அடிக்கிறது.

**வீரசேனன்** :—இன்றைக்கு இருட்டாய்த்தானிருக்கிறது. பேய் பிசாசுகளுக்கு தகுந்த ராத்திரி தான். தெய்வானுகூலத்தால் நம்முடைய வேடிக்கை நன்றாய் முடியவேண்டும்,

(போகிறார்கள்.)

### காக்ஷி. 3.

தெருவு. குணசுந்தரி, பானுமதி, பராக்கிரமன்.

(வருகிறார்கள்.)

**குணசுந்தரி** :—வைத்தியரே தாங்கள் பச்சை உடுப்புடன் என் பெண்ணைக் கண்டு, அவளை மெதுவாக தொட்டால், அவள் உடனே உம்முடன் வந்துவிடுவாள். உடனே கூட்டிக்கொண்டு போய் மேற்கு கோவிலில் கலியாணம் செய்துக் கொள்ளும். வெகு சீக்கிரம் முடிக்கவேண்டும். கொஞ்சம் அவள் தகப்பனுக்கு சமாசாரம் எட்டினால் அவர் கலியாணத்தை நிறுத்தி விடுவார். ஆதலால் சீக்கிரம் முடித்துக்கொள்ளும். ஆனால் நாம் முன்னமேயே அங்கே போய் ஒளிந்து காத்திருப்போம்.

**பராக்கிரமன்** :—நல்லது அப்படியே செய்கிறேன்.

(போய் விட்டார்கள்.)

**குணசுந்தரி** :—என் புருஷனுக்கு பீமவர்மன் வீட்டுக்கு வந்துவிட்டுப் போவதில்கூட அவ்வளவு வருத்தமும் கோபமும் வருகிறதில்லை. என் பெண்ணை வைத்யருக்கு கொடுப்பதென்றால் கோபமும், வருத்தமும் அதிகமாக வருகிறது. இருக்கட்டும் அதைப்பார்த்து என்ன செய்கிறது. முன்னால் நம்மை வைதபோதிலும், பிறகு எப்போதும் நமது

மனதுக்கு திருப்தியாயிருக்கும் காரியத்தை யல்லவா செய்யவேண்டும்.

பானுமதி :—உன் மேகனமும் அவள் பிசாசுசனும் எங்கே. பிரதாபப்பிசாசு இன்றைக்கு வருமா, பத்மினிப்பிசாசு எங்கே.

குணசுந்தரி :—அவர்கள் எல்லோரும் ஆலமரத்துக்குப் பக்கத்தில் ஒரு குழியில் வெளிச்சத்தையெல்லாம் மறைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். பீமவர்மனும் நாமும் சந்தித்த உடனே அவர்கள் வெளிச்சத்தோடு வந்துவிடுவார்கள்.

பானுமதி :—இருந்திருந்தாப்போல் இப்படி வீருவதில் அவனுக்கு வெகு ஆச்சரியமாகத்தானிருக்கும்.

குணசுந்தரி :—அவன் பயப்பட்டால், நாம் இன்னும் அவமானம் ஜாஸ்தியாக செய்யலாம் பயப்படாமல்போனால் எல்லோரும் சேர்ந்து அவனை வைது வீட்டிற்கு அனுப்புவோம். ப்ரதாபன் பிசாசுகளுக்கென்று பாட்டுக்கூட சொல்லிக் கொடுத்திருக்கிறான்.

பானுமதி :—என்ன பாட்டு, நல்ல பாட்டா?

குணசுந்தரி :—பிசாசுகளுக்கு நல்லபாட்டேது, நல்லமெட்டேது. பீமவர்மனுக்கு, நீதிகற்பிக்க தகுந்த பாட்டாக, பிசாசுகளுக்குத் தகுந்த மெட்டாக, குதிப்பதற்குத் தகுந்த தாளத்துடன், மெட்டு போட்டு சொல்லிவைத்திருக்கிறான்.

பானுமதி :—அவனுக்கு தகுந்த சிக்ஷைதான். நல்லது மணியடித்துவிட்டது. நாம் ஆமைரத்திற்கு போவோம். (போகிறார்கள்.)

4-வது காக்ஷி.

மைதானத்தில் ஓர்பாகம்.

பிசாசுவேஷத்தோடு ப்ரதாபனும், பிசாசுகளும் வருகிறார்கள்.

ப்ரதாபன் :—பிசாசுகளே எல்லாம் இந்த குழிக்கு வாருங்கள். நீங்கள் ஒவ்வொருவரும் செய்யவேண்டியதை நன்றாய் ஞாபகத்தில் வைததுக்கொள்ளுங்கள். தைரியமாய் இருங்கள். நான் உத்தரவு கொடுத்த உடனே, நான் உங்களுக்கு முன்னேயே சொல்லியிருக்கிறபடி செய்யுங்கள். சீக்கிரம் ஒண்டிக்கொள்ளுங்கள்.

(எல்லோரும் ஒண்டிக்கொள்கிறார்கள்.)

5-வது காக்ஷி.

ஆலமரம் பக்கத்தில், வேறு ஒரு புரத்தில், பீமவர்மன் மாறுவேஷம் பூண்டு, தலையில் மான்கொம்புள்ள தலையை வைத்துக்கொண்டு இடுப்பில் சங்கிலியும், மணியும் கட்டிக்கொண்டு சங்கிலிவீரன்போல் வருகிறான்.

பீமவர்மன் :—இப்போது தான் மணி-12 அடித்தது. இதோ அவர்களும் வருகிற சமயமாய் விட்டது. சுவாமி, பகவானே, இந்தத்தடவையாவது என் காரியம் கைகூடும்படி ஒத்தாசை செய்யவேண்டும். மன்மதா உன் செய்கைகள் தான் என்ன கொடூரமாயிருக்கிறது. என்னை எப்படியெல்லாம் வேஷம் போட்டுக்கொள்ளும்படி தூண்டுகின்றனை. இப்படி வேஷம் போட்டுக்கொண்டு, அடிபட்டுக்கொண்டு, சாக்கடையில் புரண்டுகொண்டு, கஷ்டப்பட்டு கடைசியில், இப்பெண்களை கமலாகரனுக்கா கொடுப்பது. இனி அவனுக்கு நான் கொடுக்கமாட்டேன். அவன் பணத்தை வேண்டுமானாலும், நான் கஷ்டப்பட்டதற்கென்று வைத்துக்கொண்டு, ஏதோ கொஞ்சம் கொடுத்து அனுப்பிவிடுகிறேன். கூடுமானால் அதையும் இல்லாமல் ஏமாற்றிவிடுகிறேன். காமத்தின் காரியம் தான் எவ்விதமாய் முடிகிறது. இந்தக்காமம் தானே சில சமயங்களில் மனிதனை மிருகமாக்குகிறது. இதே காமம்தானே சில சமயங்களில் மிருகங்களையும் மனிதனுக்கு சமானமாகச் செய்கிறது. காமா, உன் மகிமையை நான் என்னவென்று சொல்லட்டும். உன் இஷ்டம்போல எதையும் முடித்துக்கொள்கிறாயே! பகவானே என் காரியத்தில் எப்படியாவது ஒத்தாசை செய்யவேண்டும். காமத்துக்கு கண்ணேது, போஜனையேது, பயமேது, லஜ்ஜையேது என்னை இப்போது பானுமதியாகப் பார்த்து, கழுதைபோல் வேஷம் போட்டுக்கொண்டு கத்திக்கொண்டு வந்தால் தான் நான் சம்மதிப்பேன் என்று சொன்னபோதிலும், நான் அப்படியே கத்திக்கொண்டுவரத் தயாராய்த்தானே இருப்பேன். இதில் நாமென்ன அதிசயம். தேவாதி தேவதைகள், பகவான் கூட இப்படி காமன் வலையில் அகப்பட்டுக்கொண்டு சொன்னதெல்லாம் கேழ்க்கும்போது நாம் மனிதன் மன்மதனுக்கு ஒரு லக்ஷ்யமா. நாம் அவனை மீறக்கூடுமா! சுப்பிரமணியஸ்வாமி, வள்ளியம்மை பேரில் ஆசைவைத்து அவளிடம் ஆண்டி வேஷம் போட்டுக்கொண்டு போகவில்லையா. அர்சுனன் சுபத்ரையை கலியாணம் செய்துகொள்ள, சன்யாசி வேஷமாகப் போகவில்லையா. ராவணன் சீதைக்காக சன்யாசி வேஷம் போட்டுக்கொண்டு போக வில்லையா. இந்திரன் அஹல்யைக்காக, சாக்காயின் வேஷமெடுத்து கத்தவில்லையா. இதையெல்லாம் யோஜிக்குமளவில் நாம் கொம்புடன் வந்தது ஒரு அதிசயமா! பகவான் முதல், இந்தக்காமவேசத்தால் மிருகவேஷம் போட்டுக்கொண்டிருக்க நான் மனிதன் தானே, நானெப்படி என் காமத்தை அடக்கக்கூடும்! மணியும் ஆகிவிட்டது, சமயமும் வந்துவிட்டது. இதோ என் கண்மணிகளும் வந்துவிட்டார்கள்.

பானுமதி, குணசுந்தரி வருகிறார்கள்.

பானுமதி :—பீமவர்மரே, என்மானே, என் தேனே இங்கே இருக்கிறீரா. குணசுந்தரியும் வந்திருக்கிறாள்.

குணசுந்தரி :—பானுமதி, நாம் அவரை என் மானே என்று கூப்பிடவேண்டுமென்றல்லவா அவர் மான் கொம்புகள் வைத்துக்கொண்டு வந்திருக்கிறார். தெரியுமா, அவருடைய தந்திரமே தந்திரம்.

பீமவர்மன் :—என் கண்மணிகளே, ஆகாயம் கல் மாரி பெய்தாலும்சரி, புயல்காற்று வந்தாலும்சரி, நம்மை நெருப்பு சூழ்ந்தாலும்சரி, இந்த ஆலமரம் வேருடன் அறுந்து விழுந்தாலும் சரி நீங்கள் என் பக்கத்தில் இருந்தால் போதுமானது. அதெல்லா வற்றையும் நான் லக்ஷ்யம் செய்யமாட்டேன்.

(கட்டிக்கொள்ள வருகிறான்.)

பானுமதி :—என்மானே, என்னைக் கட்டிக்கொள்ள வந்தால் குணசுந்தரி தன்னைக் கட்டிக்கொள்ளவில்லையென்று கோபித்துக்கொள்ளமாட்டாளா.

பீமவர்மன் :—ஒரு கையால் உன்னைக் கட்டிக் கொள்ளுகிறேன். மற்றொருகையால் குணசுந்தரியைக் கட்டிக்கொள்ளுகிறேன்.

பானுமதி :—என்னைத்தான் வலதுகையால் கட்டிக்கொள்ளவேண்டும்.

குணசுந்தரி :—என்னைத்தான் வலது கையால் கட்டிக்கொள்ளவேண்டும்.

பீமவர்மன் :—கண்மணிகளே. நீங்கள் இதற்காக சண்டை போடவேண்டாம். என்பாக்கியம் தான் என்ன பாக்கியம்! என் தேகத்திலேயே பாதி, உங்கள் ஒவ்வொருவருக்கும் கொடுத்து விடுகிறேன்.

குணசுந்தரி :—பாதி நாங்கள் தாங்கமாட்டோம். தயவுசெய்து எங்கள் இருவருக்கும் சேர்ந்து 8-இல் ஒரு பங்கு கொடுத்தால்போதும்.

பீமவர்மன் :—பெண்களே, நம்மகாரியம் முடிந்தவுடனே, இந்த கொம்புகளில், ஒன்று ஒரு புருஷனுக்கும், மற்றொன்று மற்றொருவனுக்கும் கொடுத்துவிடுகிறேன். அவர்கள் செலவிட்டு உங்களை கலியாணம் செய்ததற்கு, ஒவ்வொருவருக்கும் ஒரு கொம்புதான் மிச்சம் என்று அவர்களிடம் சொல்லி கொடுத்துவிடுகிறேன். என்னைப் பார்த்தால் இப்போது சங்கிலி வீரனைப்போலிருக்கிறதா? பகவானுக்கு இப்போது தான் என்பேரில் கிருபைவந்தது.

(உள்ளே கூச்சல் உண்டாகிறது.)

குணசுந்தரி :—அய்யோ இதென்ன கூச்சல் பயமாயிருக்கிறதே.

பானுமதி :—சுவாமி, சங்கிலிவீரசுவாமி நாங்கள் செய்தது அபராதம் பொறுக்கவேண்டும்.

பீமவர்மன் :—என்ன இன்னும் கூச்சல் நிற்கவும் காணோமே இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது.

குணசுந்தரி :—(முன் ஓடிக்கொண்டு) ஓடிவா-ஓடிவா (இருவரும் ஓடிவிடுகிறார்கள்.)

பீமவர்மன் :—நமக்கு ஏதோ நல்லவேளை வரமாட்டேனென்கிறது, நல்ல சமயத்தில் சுவாமி நம்மை பிரித்து விடுகிறார். பூர்வஜன்மத்தில் எந்த நேசமான தம்பதிகளைப் பிரித்தோமோ தெரியவில்லை. இதென்ன வெளிச்சமிது ஆச்சரியமாயிருக்கிறதே. ப்ரதாபன் பெரிய பிசாசாகவும், கூட பத்மினி, முனியன் பேய்களாகவும், மோகனமாலை (சிகப்பு உடுப்புடன்) பிசாசு ராணியாயும் அவள் சகோதிரனும் மற்றவர்களும் கொள்ளிவாய் பிசாசுகள்போல தலையில் வெளிச்சம் வைத்துக்கொண்டு வருகிறார்கள்.

பத்மினி :—ஓ பிசாசுகளே, கறுப்பு, சிகப்பு, பச்சை, நீலம், ஊதா எல்லாவர்ணப் பேய்களும் இங்கே வாருங்கள் இனிமேல் நமது காலம் தான். நிலவும் வரப்போகிறது. சீக்கிரம் உங்கள் காரியங்களையெல்லாம் பாருங்கள். பிசாசுத் தலைவனே, எல்லாப் பேய்களுக்கும் ஆக்கினையிடுங்கள்.

முனியன் :—ஓ பிசாசுகளே உங்கள் பெயரை கூப்பிடுகிறேன். அவரவர்களுக்கு சொல்லும் காரியத்தை சீக்கிரம் போய் பார்க்கவேண்டும் கவனியுங்கள். சடையா, நீபோய் ஒவ்வொருவீட்டின் புகைக்கூண்டிலும் புகுந்துகொள். யாராவது அடுப்பின் கீழ் அசுத்தமாக வைத்துக்கொண்டு, சாமான்களை போட்டது போட்டபடியே வைத்துவிட்டு தூங்கினால் நீ போய் அவர்களை தூங்கவிடாதே, அவர்களை குத்து. நமது ராணிக்கு அடுப்பை அப்படி அசுத்தமாய் வைத்திருப்பது கூடாது.

பீமவர்மன் :—இவைகள் பிசாசுகள் போலிருக்கிறது. அவைகளை மனிதன் பார்த்தபோதிலும், அவைகளோடு பேச ஆரம்பித்தபோதிலும், செத்துப்போய்விடுவான். நான் குப்புறப் படுத்துகொண்டு கண்ணை மூடிக்கொள்ளுகிறேன். மனிதன் அவைகள் செய்யும் காரியங்களைப் பார்க்கக்கூடாது.

(குப்புறப் படுத்துக்கொள்கிறான்.)

ப்ரதாபன் :—இருளன் எங்கே! இருளா நீபோய், அலைந்து எந்த வீட்டில் ஒரு பெண்பிள்ளை படுத்துக்கொள்ளும்போது மூன்றுதரம் பகவானை ஸ்தோத்திரம் செய்கிறாளோ, அவளிடம் நீ போகாதே. எவள் படுத்துக்கொள்ளும்போது தன்னுடைய பாபங்களை நினைக்கவில்லையோ அவளை தூங்கவிடாதே. அவளை குத்து. தேகம், முகம், கைகால், எங்கேயும் விடாமல் குத்து.

பத்மினி :—காட்டேரி, நீ இங்கேவா! எந்த வீட்டில், ஆணாவது பெண்ணாவது விளக்குவைக்காமலும், வெளிச்சமில்லாமலும் சமயல் செய்கிறதும், சாப்பிடுகிறதும் வழக்கமாக வைத்திருக்கிறார்களோ, அங்கே நீ போய், அவர்கள் சமைத்துவைத்திருந்தால், அதை கணத்தில் போட்டுவிடு. சாப்பிட்டுக்கொண்டிருந்தால், அவர்கள் ஒருவாய் சாப்பிடுவதற்குள் நீ முழுவதையும் சாப்பிட்டுவிடு.

முனியன் :—தோகமலையெங்கே! அடே நீ போய் எந்தப்பெண் தலைவாரிக்கொள்ளாமலும், எண்ணெய்

தேய்த்துக்கொள்ளாமலும், தேகத்தில் சுத்தமில்லாமலும் இருக்கிறாளோ, நீ அவளைப் பிடித்துக்கொண்டு அவளுக்குப்போடும் ஆகாரமெல்லாம் நீ சாப்பிட்டுவிட்டு அவள் உடம்பை அரை உடம்பாக செய்துவிட்டு வந்துவிடு.

**பத்மினி** :—பிசாசுகளே, மற்றவர்களெல்லாம் அவரவர்கள் போகவேண்டிய இடங்களுக்குப்போய், புஷ்பங்கள் பறித்துக்கொண்டு, உங்கள் புஷ்பங்களை மாலையாக கட்டிக்கொண்டு, சீக்கிரம் வாருங்கள். ஆனால் நாம் வழக்கப்படி ஆலமரத்தை சுற்றி கூத்தாடுவதை மறந்து விடாதேயுங்கள். மணி ஒன்றாகப் போகிறது. நாம் நமது யஜமானன், சங்கிலிவீரனுடைய மரத்தடியில் கூத்தாடிவிட்டு பிறகு போகலாம் வாருங்கள்.

**ப்ரதாபன்** :—எல்லோரும் கைகோத்துக்கொள்ளுங்கள். வரிசையாக நில்லுங்கள். நமது மஸால்ஜிகளாகிய மின்னு மின்னு பூச்சிகளெல்லாம் எங்கே அடே சித்தண்ணா சீக்கிரம், நமது மின்னுமின்னு பூச்சிகளையெல்லாம் நமது மரத்துக்குச்சுற்றி, வெளிச்சம் போடச்சொல். அடே இருங்கள் இருங்கள், பேய்காள் எல்லோரும் என் பக்கத்தில் வாருங்கள். இங்கு ஏது இன்றைக்கு மனிதனுடைய வாசனை வீசுகிறது.

**பீமவர்மன்** :—சுவாமி, என்னை இந்த பெரிய பேயினின்றும் காப்பாற்றவேண்டும். அது என்னைக் கண்டுகொண்டால் சாம்பலாகச் செய்துவிடுமே. என்ன செய்வேன்!

**பத்மினி** :—(தேடிப்பார்த்து) ஓகோ இதோ ஒரு மனிதன் படுத்திருக்கிறான். எங்கே அந்த பரிக்ஷை தீபங்களைக் கொண்டுவாருங்கள. அவன் விரல் நுனியில் கொளுத்துங்கள் வெளிச்சம் அவன் விரலில் படாமல் போனாலும், அவனுக்கு வலியுண்டாகாமலிருந்தாலும் அவன் சுத்த மனிதன் தான. ஆனால் கொஞ்சமாவது அது பொறுக்கமாட்டாமல், உடம்பை அசக்கினபோதிலும் அவன் சுத்தமனிதன் அல்ல.

**முனியன்** :—எல்லோரும் வாருங்கள் பரிக்ஷை பார்க்கலாம்.

**ப்ரதாபன்** :—வாருங்கள், வாருங்கள் இந்த பெருங்கட்டையில் நெருப்பு பிடிக்குமா பாருங்கள் (எல்லோரும் சேர்ந்து வர்த்தியால் கொளுத்துகிறார்கள்.)

**பீமவர்மன்** :—அய்யோ! அய்யோ சுவாமி சங்கிலிவீரரே, நான் உம்மைப்போல வேஷம் போட்டுக்கொண்டது தப்பிதம். நான் இங்கே வந்ததும் தப்பிதம். மன்னிக்கவேண்டும். நான் இனி வீரசேனன், உக்ரசேனன் இவர்கள் பெண்சாதிகள் பேரில் ஆசை வைக்கவில்லை. விட்டுவிடுகிறேன். விட்டுவிடுகிறேன். அவர்களை இங்கே கூட்டிவந்தது தப்பிதம். அந்த கெட்ட காரியத்தை இந்த புண்ணிய ஸ்தலத்தில் நான் செய்ய வந்தது தப்பிதம். கொளுத்தாதேயுங்கள் சுவாமி அய்யோ உயிர் போகிறதே.

**பத்மினி** :—கொளுத்துவதை நிறுத்துங்கள். (நிறுத்துகிறார்கள்.) அசுத்தன் அசுத்தன் பரஸ்திரீயின் பேரில் எப்போதும் ஆசைவைத்தவன். இவனை விடாதேயுங்கள். இவனுக்கு புத்தி வரும்படி பாடுங்கள் இன்றைக்கு ஆலமரத்தை சுற்றி கூத்தாடுவதற்கு பதிலாய் இவனை சுற்றி கூத்தாடுவோம்

**ப்ரதாபன்** :—ஓகோ இத்தேகம் பெண்பேய் பிடித்த தேகம். ரொம்ப அசுத்தம்! பேய்களே பாடுங்கள். நீங்கள் பாடிக்கொண்டே, ஒவ்வொரு தாளத்திற்கும் பதிலாய், சிலர் இவனை ஊசியால் குத்துங்கள். சிலர் வர்த்தியால் கொளுத்துங்கள் சீக்கிரம்!

(எல்லோரும் பாடுகிறார்கள்.)

நாதநாமக்கிரியை ராகம்—ஏகதாளம்.

இனி பாவஞ்செய்யாதே நீ அடடா,
உன் காமத்தை மோகத்தை இத்துடன் விட
[டா.

காமம் என்பதொரு தீயே,
அன்யஸ்திரீயை எண்ணிஎண்ணி மதிகெட்ட
[நாயே!

இக்காமத்தீ உன்னையே மறிககும்,
அதை மேல்மேலும் காப்பாற்ற உன்னையே எ
[ரிக்கும்,

ராவணன் செத்தது எத்தால்,
அவன் சீதைமேல் காமத்தை வைத்த பாவத்
[தால்!

துர்யோதனனேன் முன் கெட்டான்,
அவன் மாதுத்ரௌபதியால் அவமானப்பட்
[டான்,

இந்திரன் கண்கள் ஏனாயிரம்,
அவன் அஹலியைமேல் ஆசையால் அகப்பட்ட
[திரன்!

பீமவர்மா இதைக்கேளாய்,
இனி பெண்ணாசை விட்டாலல்லாது நீ மீளாய்!

இக்காமியை கொளுத்துங்கள் பேய்காள்,
உங்கள் ஊசியால் குத்துங்கள் பேயகாள்,
நீங்கள் குத்தாமல, கொளுத்தாமல் இருந்தா
[லும் நாய்கள்.

இந்தப்பாட்டைச்சொல்லிக்கொண்டே பிசாசுகள் பீமவர்மனைக் குத்துகின்றன. பராக்ரமன் மெள்ள வந்து, பச்சை உடுப்புடன், ஒரு பெண்ணை அவள் ஜாடையால் கண்டு, அழைத்துப்போகிறான். கேசவதத்தன் வெள்ளை உடுப்புடன் வந்து தன்னுடைய சந்தேகத்தால், மற்றொரு பெண்ணை கண்டு அழைத்து போகிறான். காமசுந்திரன் வந்து மோகனமாலையை அழைத்துப்போகிறான். (உள்ளே தப்பட்டை ஓசை கேழ்க்கிறது) பிசாசுகளெல்லாம் ஓடிப்போய் விடுகின்றன. பீமவர்மன் மெள்ள எழுந்திருக்கிறான்.

(வீரசேனன், உக்ரசேனன், பானுமதி, குணசுந்தரி வருகிறார்கள். மான்கொம்புகளை எடுக்கப்போன பீமவர்மனை எடுக்கவிடாமல் பிடித்துக் கொள்கிறார்கள்.)

**வீரசேனன்** :—பீமவர்மா ஓடப்பார்க்காதே. நாங்கள் உன்னை இதுவரையில் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்தோம். சங்கிலிவீரன் உனக்குக்கொடுத்த இனாங்கள் போதுமா.

**உக்ரசேனன்** :—பீமவர்மா இந்த மான்முகம் தான் உனக்கு நன்றாக இருக்கிறது. நீ எங்கள் எல்லோருக்கும் பிரியமான மான். மான்கொம்புகள் உனக்கா, எங்களுக்கா, யாருக்கு என்று இப்போது தெரிகிறதா!

**வீரசேனன்** :—பீமவர்மா, உக்ரசேனன் பெண்சாதியின் சுகமும் வீரசேனன் பெண்சாதியின் சுகமும் போதுமா இன்னும் வேண்டுமா.

**உக்ரசேனன்** :—கமலாகரரே, அந்த அயோக்கியப்பயல் கிடக்கிறான். படவாப்பயல், பெண்டாட்டியைப் பறிகொடுத்த பயல். கமலாகரரே, பெண்டாட்டியைப் பறிகொடுத்தவன்யார். அயோக்கியப்பயல் யார். காமாட்டிப் பயல் யார், தெரிந்ததா! எல்லாம் நமது கோஷா பாட்டியம்மாள் தான்.

**குணசுந்தரி** :—எல்லோரும் வீட்டிற்குப் போகலாம்! வாருங்கள் இனிமேல் அவரைத் தொந்திரவு செய்யாதேயுங்கள், பாவம். ராயபகதூர் பீமவர்மரே என் மானே, நீங்கள் இந்த மான் முகத்துடனே காட்டிலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தால் வெகு நன்றாயிருக்கும். இந்த வேஷம் தான் உங்கள் அழகுக்குத் தகுந்தது.

**உக்ரசேனன்** :—ராயபகதூர்க்காரரே, கமலாகரரே, உமக்கு உக்ரசேனன் பெண்டாட்டி கிடைப்பது நிச்சயம். இன்றைக்கு கட்டாயம் நான் அவளை அனுபவிக்கப் போகிறேன் என்று சொன்னீரே. நன்றாய் அனுபவித்தீர். இப்படி நீர் அனுபவித்தது போலவே யார்தான் அனுபவிக்கக்கூடும். கொஞ்ச சீகமா. கந்தல்துணி, பொத்தல் பீத்தக் கூடைவாசம, கோஷா துலுக்கச்சிபுடவை, தடிப்பூசை, சாக்கடைஸ்னானம், சங்கிலிவீரப்பனவேஷம், மான் கொம்புகள், கடைசியில் தீவட்டிசுகம் இப்படி யாருக்கு கிடைக்கும்! இதெல்லாம் தவிர ரொக்கமாக 500ரூ கிடைத்திருக்கிறது. ஆனால் 500ரூக்கு பதிலாக குதிரை என் வீட்டுக்கு வந்து விட்டது. பீமவர்மா நீ நல்ல அதிர்ஷ்டமுள்ளவன். உன் கொம்புகளைப்போல எந்த மானுக்கு கிடைக்கும்.

**பானுமதி** :—பீமவர்மரே, நமக்கு ஏதோ துரதிர்ஷ்டம் நம்மை சேரவிடவில்லை. இனி நாம் எங்கே இப்படி சந்திக்கப் போகிறோம். உம்மை எங்கே இனிமேல் என் ஆசைத்தோழராக வைத்துக் கொள்ளப் போகிறேன். ஆனால் எனக்காகசிரமப்பட்டு மானாக வந்தபடியால், உம்மை என் மானே என்று கூப்பிடுகிறேன். மானே, காட்டில் புல் தின்று கொண்டு சுகமாக இரு.

**பீமர்வமன்** :—என்னை நீங்களெல்லோரும் சேர்ந்து கழுதை செய்து விட்டீர்களல்லவா. இருக்கட்டும்.

**உக்ரசேனன்** :—கழுதைமட்டுமா, பெண்களை நாய்போல நீ துடரவில்லையா. அந்தம் பட்டத்தையும் உன்னை விட்டு வேறு யாவர்க்கு கொடுப்பது தகும்.

**பீமவர்மன்**:—இவைகளெல்லாம் ஆனால் நிஜபிசாசுகள் அல்லவா. நானும் ஒரு தடவை இவைகள் பொய்ப் பிசாசுகளாய் இருக்கலாமோ என்னவோ என்று பார்த்தேன். ஆனால் நான் செய்த கெட்ட காரியத்துக்கும், இங்கே வரக்கூடாத இடத்துக்கு வந்ததும், அதைப்பற்றி என் மனதிலேயே ஒரு பக்கத்தில் பயம இருந்ததிலும், ராத்திரி இருட்டு வேளைக்கும், எல்லோருடைய நம்பிக்கை போலவே திடீரென்று இதுகளெல்லாம் சேர்ந்து வரவும் என் மனது கலங்கி ஒரு யோஜனையும் போகாமல் நிஜப் பேய்களென்றே நினைத்து விட்டேன். என்ன ஆச்சரியம். கெட்ட காரியத்தில்மட்டும் புகுந்தால், நம்பிக்கை கொள்ளக்கூடாத சங்கதிகளைக்கூட நம்பிக்கை கொள்ளும்படி நமது மனது தூண்டுகிறது.

**ப்ரதாபன்** :—பீமவர்மா, உன் கெட்ட எண்ணங்களை விட்டுட்டு, பிறர் பெண்சாதிகள்மேல் ஆசைப் படாமலிருந்தால், பிசாசுகளும் இனி உன்னை குத்த மாட்டாது, தெரிந்ததா.

**உக்ரசேனன்**:—ப்ரதாபப் பிசாசே நன்றாய்சொன்னாய்.

**ப்ரதாபன்** :—நீயும் உன் பெண்சாதிபேரில் பொறாமையையும் சந்தேகத்தையும் விட்டுவிடு.

**உக்ரசேனன்** :—கமலாகரர் இனி தன் பெண்சாதி பேரில் எப்போதும் சந்தேகப்படமாட்டார். பீமவர்மன் சொன்னபடி இன்றைக்கு கமலாகரர் உக்ரசேனன் பெண்சாதியிடம் கட்டாயம் படுக்கப்போகிறார். பீமவர்மா, கமலாகரரிடம் சொன்னபடி உக்ரசேனன் பணம 500ரூ தவிற எத்தனை கொள்ளையிட்டாய். கொள்ளையிட்ட பணமெல்லாமெங்கே.

**பீமவர்மன்** :—என் புத்தியெல்லாம் இந்த சமயத்துக்கென்று எங்கேயோ ஓடிப்போய் விட்டது. ராத்திரி வேளைகூட பாராமல் துணிந்துபோகச்சொன்ன என் புத்திக்கு பிரதாபன்கூட கேலிபண்ணுவது நியாயம்தான்.

**குணசுந்தரி** :—பீமவர்மா, நாங்கள் எங்கள் லஜ்ஜையெல்லாம் விட்டுவிட்டு கெட்டமார்க்கத்தில் இருந்துகொண்டிருந்தால்கூட அப்போதும் உன்னை லக்ஷியம்செய்து, உன்னை அனுபவிக்க நாங்கள் ஒரு போதும் எண்ணமாட்டோம். குதிருபோல இருக்கிறாயே, உன்னை அடைய எந்தப் பெண்பெண்டாட்டிதான் ஆசைப்படுவாள்.

உக்ரசேனன் :—பெண்பெண்டாட்டிகள் ஆசை நாயகன் பார்ப்பதிலும் இந்த கிழட்டுத் தடியனைத் தானா பார்க்கவேண்டும்.

வீரசேனன் :—வயதும் ஆகிவிட்டது, புருவமெல்லாம் நரைத்துப்போய்விட்டது. இதுபோதாமல் பூதம்போல இருக்கிறான். இவனை எந்தப்பெண் லக்ஷியம் செய்வாள்.

உக்ரசேனன் :—முகமும் பிசாசுபோல இருக்கிறானே! இப்போ வந்ததுகளெல்லாம் பொய்ப் பிசாசு இவன் தான் நிஜப்பிசாசு!

ப்ரதாபன் :—போதாக்குறைக்கு கஞ்சா தின்றுவிட்டு கண்டபடி பிதற்றப்பட்டவன் எத்தனைஇடங்களில் கெட்ட நடத்தைக்கு இப்படி உதைபட்டிருக்கிறானோ!

பீமவர்மன் :—நானே இளப்பப்பட்டு அவமானப்பட்டுப் போய்விட்டேன். உங்களிடத்தில் சமயத்தில் அகப்பட்டுக் கொண்டேன். எனக்கோ என் புத்தியெல்லாம் போய் யோஜித்து பதில் சொல்வதற்குக் கூட சாமர்த்திய மில்லாதவனாக இருக்கிறேன். செத்த மாட்டை காக்கைகள் கொத்துவதுபோல, நீங்கள் என்னை இப்போது என்ன சொன்னாலும் சொல்லலாம். என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். கேட்டுக்கொள்ளுகிறேன்.

உக்ரசேனன் :—நல்லது இத்துடன் உன்னை விட்டோமா, நீ பட்டணத்துக்கு எங்கள் பின்னோடு வரவேண்டும். ஒரு கமலாகரர் என்பவருடன் கெட்டகாரியங்களுக்காக சேர்ந்து அவர் பணத்தையெல்லாம் நீ மோசம் செய்திருக்கிறாயல்லவா. அந்தப்பணத்தை திருப்பிக்கொடாமல் உன்னை விடுகிறதில்லை.

பானுமதி :—அவன் எங்கேயிருந்து அந்தப்பணத்தைக் கொடுக்கப்போகிறான். அவன் ராயபகதூர் பட்டம் வாங்கினதற்கு கடைசியில் மிச்சம் இந்த இரண்டு கொம்புகள்தான். அதுகளை அவனுக்கே கொடுத்து அவனை மன்னித்து விடுங்கள். அவன் இதுவரையில் பட்டிருக்கிற கஷ்டங்களுக்கு, அந்தப் பணம் இனமாயிருக்கட்டும் கமலாகரர் அவனுக்கு இனமாகத்தானே கொடுத்தார். அது போனால்போகிறது! இனிமேல் முன்போல் பீமவர்மனும் நாமும் ராஜியாய் விடுவோம்!

உக்ரசேனன் :—(பீமவர்மன்கொம்புகளைபிடுங்கி) பீமவர்மா! நீ சிரமப்பட்டு சம்பாதித்த இந்த இரண்டு கொம்புகளையும் நீயே வைத்துக்கொள்ளவேண்டும். இதுதான் உனக்கு மிச்சம், இனிமேல் நாம் சிநேகிதர்களாகி விடுவோம்! உன்னை இத்துடன் மன்னித்துவிட்டேன்.

வீரசேனன் :—பீமவர்மா! நீ வருத்தப்படாதே. இன்றைக்கு நீ என் வீட்டில் சாப்பிடலாம். அங்கே இப்போது நீ வரவேண்டும். வந்தால் அங்கே ஒரு தமாஷ் இருக்கிறது. இப்போது குணசுந்தரி உன்னைப் பார்த்து சிரித்தாளல்லவா! நீ அங்கே வந்தால், குணசுந்தரியைப் பார்த்து நீ சிரிக்கலாம். அவள் பெண்ணை கேசவதத்தன் இந்நேரம் கலியாணம் செய்திருப்பான். டாக்டருக்குத்தான் கொடுப்பேனென்று என்னிடம் சத்தியம் செய்தவள் இப்பொழுது ஏமாந்து நிற்கிறாள். நீ அவளைப்பார்த்து சிரி!

குணசுந்தரி :—அதென்ன அவ்வளவு நிச்சயமா! மோகனம்மட்டும் என் பெண்ணாயிருக்கும் பக்ஷத்தில் அவள் இந்நேரம் பராக்ரமன் பெண்சாதியாக இருக்கவேண்டும்!

கேசவதத்தன் ஓடிவருகிறான்.

கேசவதத்தன் :—வீரசேனன் எங்கே, ஓய் வீரசேனரே, என்னை இப்படி அவமானப்படுத்த எத்தனை நாள் யோஜித்திருந்தீர்! இருக்கட்டும் சொல்லுகிறேன்!

வீரசேனன் :—கேசவதத்தரே என்ன சங்கதி, காரியத்தை முடித்துவிட்டீரா?

கேசவதத்தன் :—இனி என்னை முடிக்கவேண்டியதுதான். இருக்கட்டும் இதற்குத் தகுந்தது நானும் செய்கிறேன். இந்த அக்ரமம் எங்கே இப்படிநடக்கும்.

வீரசேனன் :—கேசவதத்தரே நடந்த சங்கதி என்ன சொல்லும்.

கேசவதத்தன் :—சொல்லுகிறதென்ன, நான் தெற்கு கோவிலுக்குப்போய் கலியாணம் செய்ய ஆரம்பித்து பாதி ஆனவுடனே செவ்வையாய்ப் பார்க்கவும், எனக்கு கலியாணத்துக்கென்று வந்தபெண் ஒரு சிறு பையனாக இருக்கக்கண்டேன். அதுமட்டும் கோவிலாயிராமலிருந்தால், அவனை அங்கேயே தூக்கி எறிந்திருப்பேன். உமதுபெண் மோகனமாலை யென்றல்லவா நான் அவளை அங்கே கூட்டிப் போனேன். அவள் ஒரு போஸ்ட்மாஸ்டருடைய பிள்ளையாகப் போய்விட்டாளே. பெண்ணைகொடுக்க இஷ்டமில்லையென்று சொல்லிவிட்டால் போகிறது. அதற்கு என் இப்படியெல்லாம் ஏமாற்றவேண்டும்.

வீரசேனன் :—எனக்கு இந்த சூதெல்லாம் ஒன்றும் தெரியாதே இருக்கட்டும். கேசவதத்தரே என் பெண் வெள்ளையுடுப்பு போட்டிருந்தாளா.

கேசவதத்தன் :—நீங்கள் என்னைத்தானே வெள்ளையுடுப்பு போட்டுவரச் சொன்னீர்கள்.

வீரசேனன் :—ஓய் நான் உமக்கு விபரமாய், என் பெண்ணை வெள்ளையுடுப்பில் கூட்டிக்கொண்டுபோம் என்று சொல்லவில்லையா. அவள் வெள்ளை உடுப்பு போட்டிருப்பாள் கூட்டிப்போம் என்றுதானே அர்த்தம்.

கேசவதத்தன் :—அது அப்படித்தான் அர்த்தமாகுமோ. வெள்ளையுடுப்பில் கூட்டிப்போ என்றால் நீ வெள்ளையுடுப்பு போட்டுக்கொண்டு கூட்டிப்போ என்றர்த்தம். இது போதாதென்று நான் எங்கள் சங்கேதப்படி அவளிடம் போவமே என்று சொன்னேன். அவளும் எனக்கு முன்னால் போ என்று சொன்னாளே. இவ்வளவு செய்தும் அவள் பையனைப் போய்விட்டாளே, நான் அங்கேபோய் பார்த்தபிறகு தானே எனக்குத் தெரிந்தது. அவளும் வெள்ளையுடுப்புதானே போட்டிருந்தாள்.

வீரசேனன் :—இதென்ன அக்ரமம். இது யாரோ வேணுமென்றே செய்து எங்கள் இருவரையும் ஏமாற்றியிருக்கிறார்கள். இதற்கு நான் என்ன செய்யட்டும். (கேசவதத்தன் போகிறான்.)

குணசுந்தரி :—தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும். கோபித்துக்கொள்ளக்கூடாது. நான் தான் அவனுக்கு பச்சையுடுப்பு போட்டு வெள்ளைஉடுப்பை எடுத்தெரிந்துவிட்டு, டாக்டருக்கும் அப்படியே சொல்லி வைத்தேன். தாங்கள் என்னை ஏமாற்ற நினைத்தீர்கள். நான் உங்களை ஏமாற்றிவிட்டேன். அவள் இந்நேரம் பராக்ரமனை கலியாணம் செய்திருப்பாள்.

பராக்ரமன் ஓடிவருகிறான்.

பராக்ரமன் :—குணசுந்தரி எங்கே, குணசுந்தரி இது உனக்கு தர்மமா. ஒரு பையனுக்கு பெண்வேஷம் போட்டு எனக்கு அனுப்பிவிட்டாயே! என்னை ஏமாற்றிவிட்டாயே! நான் மோகனமாலையென்று ஒரு பெண்ணை கூட்டிப்போய் கலியாணம் செய்ய எத்தனிக்க அவள் ஒரு பையனாக இருக்கிறாளே! நீ என்னை இப்படி அவமானம் செய்யலாமா?

குணசுந்தரி :—நீ அவளை பச்சை உடுப்பில் கண்டு கூட்டிப்போனாயா.

பராக்ரமன் :—நீ சொன்னபடிதானே நான் பச்சையுடுப்பு போட்டுக்கொண்டு அவளைக்கண்டு கூட்டிப்போனேன். அப்போது அவள் செய்த ஜாடையையும் பார்த்துதானே மோகனமாலையென்று நான் கூட்டிப்போனேன். இப்படி பையனாக இருப்பானென்று தெரிந்திருந்தால் நான் கூட்டிவருவேனா.

குணசுந்தரி :—நான் அவள் பச்சையுடுப்பு போட்டிருப்பாள் அதைக்கண்டு கூட்டிப்போ என்று சொல்லியிருக்க நீ பச்சையுடுப்பு போட்டுக்கொண்டு போனால் அதற்கு நான் என்ன செய்கிறது.

பராக்ரமன் :—நான் கூட்டிக்கொண்டு போன பெண்ணும் பச்சையுடுப்புத்தானே போட்டிருந்தாள். நீ வேணுமென்றே இப்படி என்னை ஏமாற்றி விட்டாயே! இருக்கட்டும் இந்த பட்டணத்தில் எல்லோரிடத்திலும் சொல்லி உன்னை அவமானப்படுத்துகிறேன்.

(பராக்ரமன் போகிறான்.)

பீமவர்மன் :—நல்ல வேளை. ஏமாந்து போனதில் எனக்கு சிநேகிதர்கள் இங்கே இருக்கிறார்கள். இனி எனக்கு சந்தோஷம்தான்.

(இன்னும் வரும்.)

## 'Jiu-Jitsu'—The Japanese System of Physical Training.

## 'ஜ்யு-ஜிட்ஸு,' என்னும் ஜப்பானியர் தேகப்பயிற்சி முறை.



ஜப்பானியர் அளவிலும் பருமனிலும் குறைவாயிருந்தாலும் தேகக்கட்டிலும் தேகப்பயிற்சியிலும் மிகத் தேர்ந்தவர்கள். அவர்கள் தேகப்பயிற்சி முறைக்கு 'ஜ்யு-ஜிட்ஸு' என்று பேர். அது நமது காடிச் கூடம்போல் கஸரத் வித்தைகற்கும் முறையாம். அவர்கள் தேகப்பயிற்சி முறையில், (muscles) தசைநார்ப்பருமனை யவ்வளவாக விரும்புகிறதில்லை. ஆனால் ஒவ்வொரு கணுவிலும் பூட்டிலும் உள்ள நரம்புகள் பலப்படுகிற வழியை நன்றாக வறிந்து அப்பியசிப்பதில் மிகவும் தேர்ந்தவர்களாக விருக்கிறார்கள். முக்கியமாக அவர்கள் கணுக்கால், முழந்தாள், கணுக்கை, முழங்கை, தோள்பட்டை, கழுத்துப்பூட்டு இடுப்புச் சந்து இவைகளிலுள்ள முக்கிய நரம்புகள் வெகு வாட்டமாகவும் வசதியாகவும், வலுமிகுதியாகவு மிருக்கச் செய்வதில் கருத்து வைத்து அப்பியாசம் செய்கிறார்கள். அவர்களுடைய அப்பியாச முறையால், ஸ்திரீகளும் தேகப்பருமன், சதைநார்ப்பருமன் இவற்றால் தங்கள் தேகவமைப்பின் அழகையிழக்காமலே மிக்க பலசாலிகளாக வருவது சாத்தியமாயிருக்கிறது. நரம்புகளை வலுக்கச்செய்வதில் அவர்கள் இந்நரம்புகளுக்கு ஆதாரஸ்தானமான, கண்டம், மார்பு, நாபி, அடிவயிறு, இவற்றிலுள்ள நரம்புச் சக்கரங்களை உளவறிந்த புத்தி யுக்தியோடு திடம்பெறப் பழக்கி வருகிறார்கள். அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களிலுள்ள நியூயார்க் பட்டணத்தில் ஒரு ஜப்பானிய மாது ஒரு குஸ்திக்காரன் தன்னைத் தெருவில் தொந்திரவு செய்ததற்காக அவன் கையைப் பிடித்துத் தலைக்கு மேலாகத்தூக்கிச் சுழற்றிக் கீழே போட்டான். போட்டதுமன்றி அவனை போலீஸுக்கும் காட்டிக்கொடுத்து ஒரு ஸ்திரீயைத் தொந்திரவு செய்ததற்காக சார்ஜ் செய்யும்படிச் சொன்னாள். கோர்ட்டில் போய் விசாரணையின் பொழுது மாஜிஸ்திரேட்டு அந்தப்பெண்ணைப் பார்த்து நீ யெதிரியை என்ன செய்தாய் என்று கேட்க, பதில் இங்கிலீஷில் சொல்லமாட்டாமையால், அந்தப்படிசெய்து காட்டச்சொல்ல, 90 பவுண்டு நிறையுள்ள அந்தப்பெண், 160 பவுண்டு நிறையுள்ள ஒரு கோர்ட்டுத்தியோகஸ்தரை கையைப்பிடித்து வாரித் தலைக்குமேல் சுழற்றிக் கீழேபோட்டாளென்றும், கோர்ட்டார் அவள் அபார சக்தியைக்கண்டு வியந்து எதிரிக்கு 5—டாலர் அபராதம் போட்டுப்போகச்சொன்னாரென்றும் தெரியவருகிறது.

'ஜ்யு-ஜிட்ஸு' வித்தை சிறுகுழந்தைப் பருவமுதல் அப்பியாசத்துக்கு ஏற்றதாயிருக்கிறது. தேகப்பயிற்சி செய்வதில் இந்தவித்தை மிகவும் மேலானது. நமது கஸரத்வித்தை, சிலம்பம், காடி, முதலான கர்னடக வித்தையும் சிலாக்கியமானதாயிருந்தும் போற்றுவாரின்றி இப்பொழுது அதிகமாகப் பயன்படவில்லை. அங்கிலேய தேகப்பயிற்சி வித்தைகளுக்கு உபகரணங்கள் அதிகம் வேண்டும். ஜ்யு-ஜிட்ஸுவுக்கு ஒன்றும் வேண்டாம். அப்பியாசிகள் ஒருவரையொருவர் எதிர்த்து இருவர் தேகமும் வலுக்கச் செய்துகொள்கிறார்கள்.